# டயரில் கம்-டிப்பிடு இது ஒன்றுதான்




பயர்ஸ்டோனின் தனிப்பட்ட பேடண்ட் கம்-டிப்பிங் முறை உங்களுக்கு ★ அதிக மைல்கள் ★ வெடிப்பு ஏற்படாமல் அதிக பாதுகாப்பு ★ நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு அதிகமான மதிப்பு ஆகியவைகளை அளிக்கின்றது.

# Firestone

## பயர்ஸ்டோன்

பயர்ஸ்டோன் டயர் & ரப்பர் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்.

பம்பாய் ★ மதராஸ் ★ கல்கத்தா ★ பெங்களூர் ★ நாகப்பூர்
லாகூர் ★ டெல்லி ★ கராச்சி ★ கொழும்பு ★ லக்னோ

F. 13-46




ம் 5 | 1946 மே 26 | வியய
ம் 42 | | வைகாசி 13



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

# நிகழ்ச்சிச் சித்திரம்

"இந்தத் திட்டத்தைக் கொண்டு வந்தது பற்றி நீங்கள் பெருமை கொள்ளலாம்."

மூன்று மந்திரிகள் திட்டம்

காங்கிரஸ் தலைவர்கள் திட்டத்தைப் பரிசீலனை செய்து கேள்வி கேட்டுச் சந்தேக நிவர்த்தி செய்து கொள்கிறார்கள்.

உம்மன்






இத்தனை காலமும் முஸ்லிம் லீக்கின் சார்பாகத் தனி உரிமையுடன் பேசி வந்த ஜனாப் ஜின்னா இப்போது பிரிட்டிஷ் மந்திரிகளின் திட்டத்தைப் பற்றி "முஸ்லிம் லீக் நிர்வாக சபை முடிவு செய்யும்!" என்று சொல்லுகிறார்.




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 42

# என்ன சேதி?

## முறும் எரிமலை

நாடெங்குமுள்ள ரயில்வேத் தொழி
ளரின் மனோநிலைமை வெடிப்பதற்கு
ன்றால் குமுறிக் கொண்டிருக்கும் எரி
லையை ஒத்திருக்கிறது. பொது வேலை
றுத்தத்துக்குக் குறிப்பிட்டிருக்கும்
ஜன் மீ 27உ-யை எல்லாரும் படபடப்
டன் எதிர் நோக்கிக் கொண்டிருக்
றார்கள். நாட்டின் இப்போதைய நிலை
மயில் ரயில்வேக்களில் பொது வேலை
றுத்தம் மிக அபாயகரமானது, தேசத்
க்கு ஹானிகரமானது என்பது எல்லா
க்கும் தெரிந்த விஷயம். ஆனால்
ரில்வேக்களின் தலைமை அதிகாரிகள்
ட்டும் அதை உணர்ந்திருப்பதாகத்
தரியவில்லை. உணர்ந்திருந்தாலும் வேலை
றுத்தத்தைத் தடுப்பதற்கு அனுகூல
ாக அவர்கள் காரியம் செய்யவில்லை.
தாழிலாளரின் கோரிக்கைகளைப் பற்றி
யில்வே போர்டு விடுத்திருக்கும் பதில்
கவித்தனமாக இருக்கிறது. "தொழி
ளரின் கோரிக்கைகளை ஒப்புக்கொண்
ால் 57 கோடி ரூபாய் அதிகச் செலவு
ற்படும்; அதைப் பொது ஜனங்களிடத்
ான் வசூலிக்க வேண்டியிருக்கும்" என்று
சால்லிப் பயமுறுத்தியிருக்கிறார்கள்.

ரயில்வேக்களில் சென்ற வருஷம் சுமார்
) கோடி ரூபாய் லாபம் வந்திருக்கிறது.
வே, தொழிலாளரின் கோரிக்கைகளை
ப்படியே ஒப்புக்கொண்டாலும் ஜனங்க
டம் அதிகப்படியாக வசூலிக்க வேண்
ய அவசியமில்லை.

ரயில்வேத் தொழிலாளிகள் தங்கள்
ோரிக்கைகள் எல்லாவற்றையும் அப்
டியே ஒப்புக்கொண்டுதான் தீரவேண்
ம் என்று கேட்கவில்லை. தங்களுடைய
ோரிக்கைகளின் நியாயத்தைப் பரி
லனை செய்து முடிவு சொல்ல ஒரு
யாயாதிபதியை நியமிக்க வேண்டும்
ன்றுதான் கோருகிறார்கள்.

தொழிலாளரின் கட்சி அவ்வளவு
நியாயமானதாயிருக்கும் பட்சத்தில் அதைப் பற்றி விசாரணை செய்ய நியாயாதிபதி நியமிப்பதை ரயில்வே போர்டார் ஏன் ஆட்சேபிக்க வேண்டும்?

## தீயில் எண்ணெய்

ரயில்வே போர்டாரின் குதர்க்கம் அப்படியிருக்க; இங்கே தென்னிந்திய ரயில்வே அதிகாரிகள் 'எரிகிற தீயில் எண்ணெய் விடுவது போன்ற காரியங்களைச் செய்கிறார்கள். கொந்தளித்துக் கொண்டிருக்கும் தொழிலாளர்களிடையே குழப்பம் உண்டாக்கும்படியாக அங்கே நாலு பேரை 'ஸஸ்பெண்ட்' செய்வது, இங்கே இரண்டு பேரை 'டிஸ்மிஸ்' செய்வது — இப்படி ஏதாவது பண்ணிவைக்கிறார்கள். இதன் காரணமாகச் சென்ற 20உ தென்னிந்திய ரயில்வேயில் ஒரு குட்டி வேலை நிறுத்தம் ஆங்காங்கு ஏற்பட்டு, ரயில் போக்குவரவில் குழப்பம் உண்டாயிற்று. நல்ல வேளையாக அதிகத் தொல்லை எதுவும் ஏற்படாமல் முடிவடைந்தது.

இவ்வளவு குழப்பத்துக் கிடையில், தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கத் தலைவர் ஸ்ரீ கல்யாண சுந்தரத்தை இந்திய அரசாங்கத்தின் தொழில் சசிவர் தம்மைச் சந்திப்பதற்கு அழைத்திருப்பது ஒரு நல்ல செய்தியாகும். மற்ற ரயில்வேத் தொழிலாளர் தலைவர்களும் டில்லிக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்களாம். இந்தச் சந்திப்பின் பயனாக, தென்னிந்திய ரயில்வேயின் குட்டித் தகராறுகள் தீருவதுடன், பெரிய வேலை நிறுத்தம் ஏற்படாமல் தடுப்பதற்கும் வழி பிறக்கும் என்று நம்புகிறோம்.

## 'ஸ்பென்ஸர்' வேலை நிறுத்தம்

ரயில் வேலை நிறுத்தத்தைப் பற்றிப் பேசும் போது, ரயில்களில் இந்தக் கோடைகாலத்தில் 'ஸ்பென்ஸர்' சோடா கிடைப்பதில்லை என்கிற விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. இதற்குக் காரணம்

'ஸ்பென்ஸர்' கம்பெனி தொழிலாளிகள் சுமார் ஆயிரத்தைந்நூறு பேர் சென்ற ஒரு மாதத்துக்கு மேலாக வேலை நிறுத்தம் செய்திருப்பதுதான்.

தமிழ் வருஷப் பிறப்புக் காரணமாக மேற்படி வேலை நிறுத்தம் நேர்ந்தது. தமிழ் வருஷப் பிறப்பன்று விடுமுறை கொடுக்க வேண்டும் என்று 'ஸ்பென்ஸர்' கம்பெனி தொழிலாளிகள் கோரினார்கள். முதலாளிகள் கொடுக்க மறுத்தார்கள். அதன்பேரில் சுமார் 400 தொழிலாளிகள் அரை நாள் தாங்களாகவே லீவு எடுத்துக் கொண்டார்கள். அவர்களைத் திரும்ப வேலைக்கு எடுத்துக் கொள்ள முதலாளிகள் மறுக்கவே, அவர்களிடம் அநுதாபங் கொண்டு மற்றத் தொழிலாளிகளும் வேலை நிறுத்தம் செய்தார்கள். ஆகக்கூடி ஒரு மாதத்துக்கு மேலாக 1500 தொழிலாளிகள் வேலையின்றி யிருக்கிறார்கள். அவர்களுடைய பெண்டு பிள்ளைகள் பட்டினி கிடக்கிறார்கள். தகராறைத் தீர்த்து வைப்பதற்காகக் கவர்ன்மெண்டார் ஒரு சமரச அதிகாரியை நியமித்திருக்கிறார்கள். ஆனால் அந்த அதிகாரியின் பேச்சு முதலாளிகளின் காதில் ஏறவில்லை யென்று தெரிகிறது.

"ரோமாபுரியி லிருக்கும்போது ரோமரைப்போல் நடந்து கொள்" என்பது இரண்டாயிரம் வருஷமாக வழங்கிவரும் முதுமொழி; ஆங்கிலேயரிடையே வழங்கி வருவதுதான். தமிழ்நாட்டில் தமிழ்த் தொழிலாளிகளுக்குத் தமிழ் வருஷப் பிறப்பன்று அரை நாள் விடுமுறை கொடுக்க மறுப்பது பெரும் அநியாயம். ஆங்கில வருஷப் பிறப்பை ஆங்கிலேயர் அமர்க்களமாகக் கொண்டாடுகிறார்கள். அன்று ஆங்கில முதலாளிகளையும் அதிகாரிகளையும் இந்தியச் சிப்பந்திகள் பேட்டி கண்டு மரியாதை செய்கிறார்கள். இதற்குப் பதில் மரியாதையாகத் தமிழ் வருஷப் பிறப்புக்கு ஒரு நாள் விடுமுறை கொடுக்கக் கூடாதா? இதற்காக ஆயிரத்தைந்நூறு தொழிலாளிகளை வேலையை விட்டு நீக்கி வைத்திருப்பது நியாயமா என்பதை 'ஸ்பென்ஸர்' முதலாளிகள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சென்னையில் எத்தனையோ வருஷ காலமாக நிலைத்து நீடித்துப் பலவிதத் தொழில்கள் நடத்தி வரும் 'ஸ்பென்ஸர்' கம்பெனி முதலாளிகளே இவ்வளவு குறுகிய நோக்கத்துடன் நடந்து கொண்டால், வருங்கால இந்தியாவில் ஆங்கில வியாபாரிகளின் நிலைமையைப் பற்றிப் பெரிதும் கவலைப்பட வேண்டியதுதான்.

## அபசகுனம்

சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்ட பிறகு நடந்திருக்கும் முதல் தேர்தலில் காங்கிரஸ் தோல்வியடைந்திருப்பது அபசகுனமாகும். மேல் சட்ட சபைக்கு இந்தியக் கிறிஸ்துவ தொகுதியில் நடந்த உப தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர் ஸ்ரீ ஏ. என். டி. எட்ராடீக்ஸ் தோல்வியுற்றார். சுயேச்சை அபேட்சகர் ஸ்ரீ கே. ஓ. அந்தோனி வெற்றியடைந்தார். இந்தியக் கிறிஸ்துவர்கள் தேசபக்தியில் குறைந்தவர்கள் என்றோ, காங்கிரஸ் அபிமானம் அற்றவர்கள் என்றோ சொல்ல முடியாது. "காங்கிரஸ் அபேட்சகருக்கே வோட்டுக் கொடுக்கவும்" என்று காங்கிரஸ் கிறிஸ்துவ மந்திரி ஸ்ரீ டேனியல் தாமஸ் விண்ணப்பம் விடுத்ததிலும் குறைவில்லை. அப்படியிருந்தும் இந்தத் தோல்வி எதனால் ஏற்பட்டது என்னும் விஷயம் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்வதற்குரியது.



பெங்களூர் ஸ்ரீ என். வி. ஆர். அய்யர் (ஏஜண்டு, ஹிந்து & சுதேசமித்திரன்) அவர்களின் குமாரர் ஸ்ரீ என். ஆர். வெங்கடாசலம், பி. ஏ., அவர்களுக்கும் கோயமுத்தூர் ஸ்ரீ என். வி. சுப்பிரமணியம் (ஏஜண்டு, மெயில்) அவர்களின் குமாரத்தி சௌ. நாகலக்ஷ்மிக்கும் சென்ற 6-5-46ல் கோயமுத்தூரில் விவாகம் இனிது நடந்தேறியது.

# மகத்தான பொறுப்பு

கதையல்ல, கற்பனையல்ல; கேலியல்ல, ஹாஸ்யமல்ல; உண்மையாக நடந்த பரிதாப சம்பவம்; ஆனால் அதில் நெஞ்சைப் பிளக்கும்படி நகைச்சுவையும் கலந்திருக்கிறது.

மதுரை ஜில்லாவைச் சேர்ந்த கிராமம் ஒன்றில் ஒரு மனிதன் தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து போனான். அவன் பட்டினி பொறுக்காமல் தூக்குப் போட்டுக் கொண்டதாக வதந்தி பரவிற்று. இது அதிகாரிகளின் காதிலும் விழுந்த போதிலும் அவர்கள் காதைச் செவிடாகப் பண்ணிக்கொண்டு சும்மா யிருந்தார்கள். ஆனால் அந்தப் பகுதியின் காங்கிரஸ் எம். எல். ஏ. அவர்களைச் சும்மா இருக்க விடவில்லை. அந்த மனிதன் ஏன் தூக்குப் போட்டுக் கொண்டான் என்று விசாரிக்கும்படி குடைந்து குடைந்து கேட்டார். பிறகு அதிகாரிகள் விசாரணை நடத்தினார்கள். விசாரணையில் அவர்கள் அறிந்த உண்மையைப் பின்வருமாறு ரிபோர்ட் செய்தார்கள்:—

"பிரஸ்தாப மனிதன் பட்டினியினால் தூக்குப் போட்டுக் கொண்டான் என்னும் வதந்தியில் லவலேசமும் உண்மை கிடையாது. அவன் பட்டினி காரணமாகத் தூக்குப் போட்டுக் கொண்டு செத்துப் போனது உண்மையாயிருக்கும் பட்சத்தில் அவனுடைய பெண்டாட்டியும் பிள்ளையும் அவனுடன் செத்துப் போயிருக்க வேண்டும் அல்லவா? அவர்கள் சாகாமல் உயிரோடிருப்பதிலிருந்தே அவன் பட்டினி காரணமாகச் செத்துப் போகவில்லையென்று ருசுவாகிறது. தீர்க்கமாக விசாரணை செய்ததில் மேற்படி மனிதன் தரித்திரம் காரணமாகத் தூக்குப் போட்டுக் கொண்டு இறந்து போனான் என்று திண்ணமாகத் தெரிய வருகிறது!"

* * *

மேற்படி காலஞ்சென்ற பிரஸ்தாப மனிதனாகப்பட்டவன் "பட்டினியால் சாகவில்லை, தரித்திரத்தினால்தான் செத்தான்" என்று ஸ்தாபிப்பதற்கு அதிகாரிகள் ஏன் இவ்வளவு பிரயாசை எடுத்துக் கொண்டார்களென்பது நமக்கு அவ்வளவாக விளங்கவில்லை.

காரணம் எதுவாயிருந்தாலும், மேற்படி அதிகாரிகளின் யாதாஸ்தில் சோக ரஸமும் ஹாஸ்ய ரஸமும் அற்புதமாய்க் கலந்திருக்கிறது!

"பட்டினியினால் செத்திருந்தால் பெண்டாட்டியும் பிள்ளையும் செத்துப் போயிருக்க மாட்டார்களா?" என்ற வாதம் மிக அற்புதம். தரித்திரத்தினால் அவன் செத்திருந்தாலும் பெண்டாட்டியும் பிள்ளையும் ஏன் கூடச் சாகவில்லை என்று கேட்கலாம். தரித்திரம் அவர்களை மட்டும் பிடிக்கவில்லையா? தரித்திரம் பிடிக்காமலிருக்க அவர்களிடம் ஏதேனும் கவசம் இருக்கிறதா? அப்படியானால் பட்டினியைத் தடுப்பதற்கும் அந்தக் கவசம் பிரயோஜனப் படாதா?— இந்தக் கேள்விகள் எல்லாம் மேற்படி அதிகாரிகளின் மனதில் உதிக்கவில்லை.

* * *

தரித்திரத்தினால் சாவு நேர்ந்தாலும், பட்டினியினால் சாவு நேர்ந்தாலும், அவற்றின் படிப்பினை ஒன்றுதான். பஞ்சம், பயங்கரமான பஞ்சம் வந்து கொண்டிருக்கிற தென்பதற்கு அறிகுறி.

பஞ்சத்துக்கு முன்னால் பட்டினி பயம் வரும்; அதைத் தொடர்ந்து தரித்திரம் வரும். பட்டினியிலிருந்து தப்புவதற்காக முதலில் கையிலுள்ள பணத்தைச் செலவழித்துக் கறுப்பு மார்க்கெட்டில் அரிசி வாங்குவார்கள். பிறகு வீட்டிலுள்ள உடைமைகளை விற்று அரிசி வாங்குவார்கள். பிறகு விற்பதற்கு ஒன்றுமில்லாமல் போய், பட்டினி கிடக்க நேரிடும்.

வங்காளத்தில் இப்படித்தான் வந்தது. முதலில் "அங்கொருவன் இறந்தான்; இங்கொருவன் இறந்தான்" என்று செய்திகள் வந்தன. அப்புறம் சாவுகள் நூற்றுக் கணக்கில் ஏற்பட்டன; பிறகு ஆயிரம் பதினாயிரம் என்று கணக்கில் ஜனங்கள் மடியத் தொடங்கினார்கள்.

அவர்கள் பட்டினியினாலும் செத்தார்கள்! தரித்திரக் கொடுமையினாலும் செத்தார்கள்!

அதாவது அரிசி கிடைக்காமையினாலும் செத்தார்கள். அரிசி வாங்குவதற்குப் பணம் இல்லாமையினாலும் செத்தார்கள்!

பஞ்சத்தில் செத்துப் போனவர்கள் பாக்கியசாலிகள். செத்துப் போகாத

வர்கள் துர்ப்பாக்கியசாலிகள் என்ற நிலைமையும் ஏற்பட்டது.

பஞ்சத்திலடிபட்ட லட்சக் கணக்கான ஜனங்கள் சாகாமல் உயிரோடிருந்தார்கள்; ஆனால் எலும்புந் தோலுமான நடை பிணங்களாயிருந்தார்கள். வருங் காலத்தில் எவ்வித உழைப்புக்கும் தகுதியற்றவர்களாய்ப் போனார்கள்.

* * *

வங்காளத்தில் நடந்தது போல் சென்னை மாகாணத்தில் நடக்கும் என்று நாம் சொல்லவில்லை. நிலைமை அவ்வளவு மோசமாய்ப் போகாத வண்ணம் அட்வைஸரி கவர்ன்மெண்டின் ஆட்சியில் அதிகாரிகள் கூடிய வரையில் ஏற்பாடுகளைச் செய்து வந்தார்கள். அந்தவரை ஏதோ நல்ல காலந்தான்.

அட்வைஸரி கவர்ன்மெண்டை நடத்தியவர்கள் தங்களுடைய ஆட்சியில் ''ஜனங்கள் பட்டினியால் செத்தார்கள்'' என்ற அபகீர்த்தியை வகிக்க இஷ்டப்படவில்லை. அந்த அபகீர்த்தி ஏற்படாமல் தடுக்கக் கூடிய வரை முயற்சி செய்தார்கள். ''பட்டினியால் சாகவில்லை; தரித்திரத்தினால் செத்தான்'' என்று அதிகாரிகள் ரிபோர்ட் செய்திருப்பதிலேயே, ''பட்டினியால் சாக விடுவது பெரும் அபகீர்த்தி'' என்று அவர்கள் உணர்ந்திருப்பது வெளியாகிறது.

ஆறரை வருஷம் நடந்த அட்வைஸரி கவர்ன்மெண்ட் மாறி இப்போது காங்கிரஸ் மந்திரிகளின் ஆட்சி ஏற்பட்டிருக்கிறது.

சென்னை மாகாணத்தில் இனி பட்டினியினாலோ தரித்திரத்தினாலோ ஜனங்கள் சாகாமல் தடுக்கும் மகத்தான பொறுப்பு அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

சாகாமல் தடுத்தால் மட்டும் போதாது; ஜனங்கள் அரை வயிறும் கால் வயிறும் உண்டு எலும்பும் தோலுமாய் உயிர் வாழ்ந்திருப்பது செத்துப் போவதை விடக் கொடுமையாகும். அதையும் தடுக்க வேண்டும்.

அதாவது அவசியமான தேக பலத்துடனும் ஆரோக்யத்துடனும் வாழ்வதற்கு வேண்டிய உணவு எல்லாருக்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

இந்தப் பொறுப்பைச் சரிவர நிறைவேற்ற விட்டால் இப்போது பதவி வகிக்கும் மந்திரிகளின் தலையில் பயங்கரமான பழி ஏற்படும்; பட்டினிக்குள்ளாகும் ஜனங்களின் சாபம் கமரும்.

அந்தப் பழியிலும் சாபத்திலும் ஒரு பகுதி சட்டசபை அங்கத்தினர் தலையிலும் விழுந்தே தீரும்.

* * *

ஆறரை வருஷத்துக்குப் பிறகு நாளது 24உ வெள்ளிக்கிழமையன்று சென்னை மாகாணச் சட்டசபை கூடுகிறது. மேல் சபை கீழ் சபை இரண்டும் கூடுகிறது. இரண்டு சபைகளிலும் பொது ஜனங்களின் வோட்டினால் தேர்ந்தெடுக்கப் பெற்ற பிரதிநிதிகள் வீற்றிருப்பார்கள்.

பெரும்பாலும் காங்கிரஸ் மகா சபையின் சர்ட்டிபிகேட் பெற்று மஞ்சள் பெட்டியில் வோட்டுப் பெற்று வந்தவர்கள்தான்.

24உ யன்று எல்லாரும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வார்கள்.

25உ யன்று இரண்டு சபைகளுக்கும் அக்கிராசனர்களும் உப அக்கிராசனர்களும் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

பிறகு, காரியங்கள் ஆரம்பமாகும். முதல் காரியமாக, மந்திரிகளின் சம்பளம், அலவுன்ஸ், சட்டசபை அங்கத்தினரின் சம்பளம், அலவுன்ஸ் இவற்றை நிர்ணயம் செய்து கொள்ளப் போகிறார்கள்.

இப்படி நிர்ணயிக்கும்போது பம்பாய் மந்திரிகளின் உதாரணத்தை நமது மந்திரிகளும் பின்பற்றுவார்கள் என்று நம்புகிறோம்.

பம்பாய் மந்திரிகளின் மாதச் சம்பளம் ரூ. 850 என்றும் மோட்டார் அலவுன்ஸ் ரூ. 200 என்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

சென்னையைக் காட்டிலும் பம்பாயில் ஜீவனச் செலவு ரொம்ப அதிகம் என்பது யாவரும் அறிந்ததே.

எனவே பம்பாயைக் காட்டிலும் சென்னை மந்திரிகள் அதிகச் சம்பளமோ அலவுன்ஸோ எடுத்துக் கொள்வது எவ்விதத்திலும் நியாயமாகாது.

மந்திரிகள் இது விஷயத்தில் நடந்து கொள்வதைப் பொறுத்து நாளைக்கு மாகாணமெங்குமுள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சம்பள உயர்வும் அலவுன்ஸும் கோருவார்கள் என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.

சம்பளம் அதிகம் கொடுக்காவிட்டால் லஞ்சம் வாங்குவார்கள் என்னும் வாதம் பொது ஜன ஊழியர்கள் விஷயத்தில் கொஞ்சமும் பொருந்தாது.

லஞ்சம் வாங்குகிறவர்கள் பதினாயிரம் ரூபாய் சம்பளம் பெற்றாலும் லஞ்சம் வாங்குவார்கள். நேர்மையாளர்கள் பட்டினி கிடக்க நேர்ந்தாலும் லஞ்சம் வாங்க மாட்டார்கள்.

காங்கிரஸ் மந்திரிகளுக்குச் சர்க்கார் சம்பளத்தை எதிர் பார்த்து ஜீவனம் நடக்கவில்லை. இத்தனை காலமும் அவர்கள் ஜீவனம் நடந்துதான் வந்தது. மந்திரிகளின் பெரும்பாலோர் லட்சக் கணக்கில் சொத்துடையவர்கள்.

எனவே, மற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல உதாரணமாயிருக்க வேண்டும் என்பதை மனதிற்கொண்டு அவர்கள் தங்கள் சம்பளத்தை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்.

* * *

27உ திங்கட்கிழமை புதுச் சட்டசபையின் விசேஷக் கூட்டம் நடைபெறுமென்றும் அதில் உணவுப் பிரச்னையும் — துணிப் பிரச்னையும் விவாதிக்கப்படும் என்றும் அறிந்து மகிழ்ச்சியடைகிறோம். இந்தத் தயவுக்காக பிரதம மந்திரி பிரகாசம்காருவுக்கு நன்றி செலுத்துகிறோம்.

சென்னைக் காங்கிரஸ் வட்டாரங்களில் சில காலத்துக்கு முன்பு வழங்கி வந்த ஒரு கதையை இங்கே குறிப்பிட விரும்புகிறோம்.

சென்னையில் வசித்த ஒரு பெரிய காங்கிரஸ் தலைவரைப் பார்க்க அவருடைய ஜில்லாவிலிருந்து தாலுகா ராஷ்டிரபதிகளும் கிராம ராஷ்டிரபதிகளும் வந்தார்கள்.

“நம்முடைய ஜில்லாவில் உணவுப் பிரச்னை ரொம்பக் கடுமையாகிவிட்டது. ஏதாவது செய்ய வேண்டும்!” என்றார்கள்.

மேற்படி தலைவருக்கு ரொம்பவும் கோபம் வந்து விட்டது. “வெகு அழகாயிருக்கிறது! உணவுப் பிரச்னையாம்! மண்ணாங் கட்டிப் பிரச்னையாம்! ‘இண்டிபெண்டென்ஸ்’க்கு நாம் போராடுகிறோமா? கேவலம் வயிற்றுச் சோற்றுக்குப் போராடுகிறோமா? உணவு, கிணவு எல்லாவற்றையும் கொஞ்ச நாளைக்கு மூட்டை கட்டி வையுங்கள். இண்டிபெண்டென்ஸுக்கு உழையுங்கள்!” என்றாராம்.

இப்படிக் கடுமையாகப் பேசியதில் அத் தலைவருக்குப் பசி அதிகமாகி விட்டது. உடனே உள்ளே சென்றார். தவிசுப் பிள்ளையைக் கூப்பிட்டு, “காலை மணி எட்டு ஆகிவிட்டதே! இன்னுமா அடுப்பை ஊதுகிறாய்? சீக்கிரம் இட்லி கொண்டு வா! — இல்லை, இல்லை! வெறும் இட்லி கொண்டு வராதே! இண்டிபெண்டன்ஸ் இட்லியில் நாலைந்து இட்லியும், ஜெஹிந்த் சட்டினியில் இரண்டு கரண்டியும், குவிட் இந்தியா காப்பியில் ஒரு சொம்பு காப்பியும் உடனே கொண்டு வை!” என்றாராம்.

இதைக் கேட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்த தாலுகா — கிராம ராஷ்டிரபதிகள் அப்படியே மூர்ச்சை போட்டு விழுந்து விட்டார்களாம்!

இப்படிப்பட்ட உணவு வைராக்யக் கொள்கையைக் கடைப் பிடித்து விடாமல் கனம் பிரகாசம்காரு உணவுப் பிரச்னையை விவாதிக்க ஒப்புக்கொண்டது பற்றித் திருப்தியடைகிறோம். ஆனால், உணவுப் பிரச்னையைப் பற்றி ஒரே நாளில் என்ன விவாதித்து விட முடியும் என்றுதான் தெரியவில்லை. முதல் நாள் மந்திரிகள் உணவுப் பிரச்னை விஷயமான உண்மை நிலையைத் தெளிவு படுத்த வேண்டும். அதாவது உணவு நெருக்கடி உண்மையில் ஏற்பட்டிருக்கிறதா, அல்லது எல்லாம் வெறும் ஹம்பக்கா, உணவு நெருக்கடி உண்மையானால் இம் மாகாணத்தில் எத்தனை மாதத்துக்கு இன்னும் உணவுப் பொருள் இருக்கிறது, வெளி மாகாணங்களிலிருந்தும் அயல் நாடுகளிலிருந்தும் எவ்வளவு வரும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. உள் நாட்டில் அடுத்த மகசூல் எப்போது, அதில் எவ்வளவு உணவுப் பொருள் கிடைக்கும் என்பதை யெல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டும்.

பிறகு உணவு நெருக்கடியைச் சமாளிக்கத் தாங்கள் கையாள உத்தேசித்திருக்கும் திட்டங்களையும் மந்திரிகள் வெளியிட வேண்டும்.

அதன் பேரில் சட்டசபை அங்கத்தினரின் அபிப்பிராயங்களை வெளியிடவும் யோசனைகள் சொல்லவும் இடங் கொடுக்க வேண்டும்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட பிறகு மந்திரிகள் மறுபடியும் தங்களுடைய தீர்மானமான முடிவுகளைச் சொல்வது பொருத்தமாயிருக்கும்.

உதாரணமாக, விவசாயிகளிடம் கட்டாயப் படுத்தி வாங்கும் நெல்லின் விலையைக் கொஞ்சம் கூட்டி நிர்ணயிக்க வேண்டுமென்று நாடெங்குமுள்ள விவசாயிகள் கோருகிறார்கள்.

இந்தக் கோரிக்கையைப் பற்றி ஜனப் பிரதிநிதிகள் தங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்ல இடங் கொடுத்த பிறகு மந்திரிகள் தங்களுடைய முடிவுகளைச் சொன்னால் நன்றாயிருக்கும்.

இப்படிச் சட்ட சபையில் உணவுப் பிரச்னையைப் பற்றி நடக்கும் வாதம் உபயோகமான முறையில் நடக்க வேண்டுமானால் ஒரு நாள் போதாது; மூன்று நாளாவது வேண்டும்.

*　　*　　*

உணவு நெருக்கடியைத் தீர்த்து வைத்துப் பஞ்சம் முற்றாமல் தடுப்பது சம்பந்தமான காரியங்களை மூன்று பெரும் பகுதியாகப் பிரிக்கலாம்.

1. வெளிநாட்டிலிருந்து உணவுப் பொருள் இறக்குமதி செய்வது.

2. உள் நாட்டில் உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்குவது.

3. கள்ள மார்க்கெட்டை ஒழித்துத் தக்க முறையில் உணவுப் பொருள் விநியோகம் செய்வது.

உணவு நெருக்கடியைப் போக்குவதற்கு வெளி நாட்டு இறக்குமதியை நம்பியிருப்பது மதியீனம் என்று நாம் கருதுகிறோம். இதற்காக ஏற்கெனவே மத்திய சர்க்கார் செய்த பெரும் முயற்சிகள் எல்லாம் எதிர்பார்த்த பலன் தரவில்லை. ஆசை காட்டி மோசம் செய்வதாகவே முடிந்திருக்கிறது.

அப்படியே அந்த முயற்சிகள் இனிமேல் பலன் தந்து வெளிநாட்டிலிருந்து உணவுப் பொருள்கள் இறக்குமதியானபோதிலும் அவை உபயோகமற்ற மக்கிய அரிசி அல்லது உளுத்த சோளமாக இருக்கப் போகிறது.

மாடுகள் கூடத் தின்ன மறுக்கும் தானியங்களைத்தான் நம்முடைய தலையிலே கட்டுவார்கள்.

சென்ற வருஷம் திருவாங்கூரில் ஏராளமான மக்கிய சோளம் எங்கிருந்தோ வந்து சேர்ந்தது. அதைத் திருவாங்கூர் எத்தர்கள் திருநெல்வேலி ஜில்லாக்காரர்களின் தலை மேல் சுமத்தினார்கள். கோழிகள் கூட உட்கொள்ள மறுத்த அந்த உளுத்த சோளத்தை வாங்கித்தான் தீரவேண்டுமென்று திருநெல்வேலி மக்கள் தலையில் எழுதியிருந்தது. இதனால் அவர்கள் பட்ட அவதி பிரசித்தமானது.

இவ்விதம் அயல் நாட்டிலிருந்து இறக்குமதியாகும் உபயோகமற்ற உணவுப் பொருளில் நமது பணத்தை விரயமாக்காமல், இந்த மாகாணத்திலேயே குறைந்த காலத்தில் உணவு உற்பத்தி செய்யும் மார்க்கங்களைக் கடைப்பிடிப்பதுதான் சரியான முறையாகும்.

இதற்கு வழிகள் இருக்கின்றன; உபாயங்கள் இருக்கின்றன. மந்திரிகள் சரியான திட்டங்களைப் போட்டுக் காரியத்தில் நடத்த வேண்டும்.

நமது சென்ற இதழ் தலையங்கத்தில் உணவுப் பொருளை பெருக்குவதற்கான பல யோசனைகளைப் பற்றி விவரித்திருக்கிறோம். அவை எல்லாவற்றையும் விட மிகச் சிறந்த யோசனை ஒன்றும் நேரத்தின் முன்னால் இருக்கிறது.

அது ராஜாஜியின் யோசனை.

தஞ்சை, திருச்சி, கோதாவரி, கிருஷ்ணா முதலிய நன்செய்நிலம் மிகுந்த பிரதேசங்களை விவசாயிகளிடமிருந்து சர்க்கார் நீண்ட காலக் குத்தகைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும். விவசாய இலாகாவையும் இன்ஜினியரிங் இலாகாவையும் மேற்படி பிரதேசங்களின் விவசாயப் பொறுப்பை எடுத்துக் கொண்டு நடத்தச் செய்யவேண்டும். இதன் மூலம் நெல் உற்பத்தியைக் குறைந்த காலத்தில் ஒன்றுக்கு இரண்டு மடங்காகச் செய்யலாம் என்பதுதான் ராஜாஜி சொன்ன யோசனை. இதைத் தஞ்சை திருச்சி விவசாயிகள் பலரும் ஆமோதித்திருக்கிறார்கள்.

மந்திரிகளும் சட்டசபை அங்கத்தினரும் மேற்படி யோசனையைப் பற்றித் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

உணவு உற்பத்தி நமது மாகாணத்தின் தேவைக்கு வேண்டிய அளவு பெருகும் வரையில் கண்ட்ரோல் முறையும், பங்கீடு முறையும் அவசியமானவை. ஆனால் இந்த முறைகளை அனுஷ்டிப்பதில் பெரும் ஒழுங்கீனங்களும் அக்கிரமங்களும் அநீதிகளும் நடைபெறுகின்றன. கள்ள மார்க்கெட்டை ஒழிப்பதற்காக ஏற்பட்ட சட்ட திட்டங்கள் கள்ள மார்க்கெட்டைப் பெருக்குவதற்காக உபயோகப்படுகின்றன. மேற்படி அநீதிகளைப் பற்றிய விவரங்களைச் சட்ட சபைப் பிரதிநிதிகள் பலரும் அறிந்திருப்பார்கள். நாங்கள் அறிந்துள்ள விவரங்களை 27ல் நடக்கப்போகும் விவாதத்தில் நமது பிரதிநிதிகள் வெளியிடுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எஸ். சொர்ணம், 2, அங்காளம்மன் கோவில் தெரு, மஞ்சக்குப்பம், கடலூர் என். டி.



DUNLOP FORT

எல்லா
கார்களையும்
பத்திரமாக
ஓட்டுவது

# டன்லப்




DH 276 1M

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 44

## கொந்தளிப்பு

**ப**ல்லவ சேனா வீரர்கள் வாதாபிக் கோட்டையைச் சூழ்ந்து கொண்ட நாளிலிருந்து சிவகாமியின் உள்ளம் எரிமலையின் கர்ப்பப் பிரதேசத்தைப் போல் குமுறிக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

கோட்டைச் சுவருக்கு அப்பால் வெகு சமீபத்தில் மாமல்லரும் ஆயனரும் இருந்தபோதிலும் அவர்களைத் தான் பார்க்க முடியவில்லையே என்ற ஆத்திரமும், யுத்தத்தின் விளைவாக என்ன ஏற்படுமோ என்ற கவலையும், எல்லாம் நன்றாக முடிந்து மாமல்லரைத் தான் சந்திக்கும்போது அவரிடம் என்ன பேசுவது, என்னமாய் நடந்து கொள்வது என்ற சிந்தனையும் அவளை வாட்டிக் கொண்டிருந்தன.

வாதாபிக்கு வடதிசையில் நடந்த பெரும் போரில் பல்லவ சைன்யம் வெற்றியடைந்து புலிகேசி மாண்ட செய்தி சிவகாமியின் காதுக்கு எட்டிய போது, அவளுடைய இருதயம் பெருமையினால் வெடித்துப் போய்விடும் போலிருந்தது. அதோடு அந்த வெற்றியின் காரணமாகத் தன்னுடைய நிலைமையில் என்ன மாறுதல் ஏற்படுமோ என்ற கவலையும் உண்டாயிற்று.

கோட்டைத் தளபதி பீமசேனன் அவளிடம் வந்து மாமல்லருக்கு ஓலை எழுதித் தரும்படி கேட்டபோது சிவகாமி தன்னுடைய வாழ்க்கையில் என்றும் அடையாத பெருமிதத்தை அடைந்தாள். அவ்விதமே சேனாபதிக்கு ஓலையும் எழுதித் தந்தாள். அதிலே தன்னுடைய அறிவினால் சிந்தித்து என்ன முடிவுகளுக்கு வந்திருந்தாளோ அந்த முடிவுகளை எழுதியிருந்தாள். அவற்றை யொட்டி வேண்டுகோளும் செய்திருந்தாள்.

ஆனால் அவளுடைய இதய அந்தரங்கத்தில் குடிகொண்டிருந்த உணர்ச்சியை அந்த ஓலை பிரதிபலித்ததாகச் சொல்ல முடியாது. தன்னையும் தன் கலையையும் அவமதித்து அவமானப்படுத்திய அந்த நகரத்து மாக்கள் மீது பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்னும் ஆசை அவளுடைய உள்ளத்தின் அடிவாரத்தில் இன்னும் இருக்கத்தான் செய்தது. அன்றியும், நாகநந்தியின் கண் முன்னால் மாமல்லரின் வீர பராக்கிரமத்தை நிரூபித்துக் காட்டி அந்தக் கள்ள பிக்ஷுவின் அகந்தையைக் குலைத்து அவர் தலை குனிந்து நிற்பதைப் பார்க்கவேண்டும் என்னும் ஆவலும் அவள் உள்ளத்தின் உள்ளே இல்லாமற் போகவில்லை. எனவே, பரஞ்சோதிக்கு ஓலை எழுதி அனுப்பிய பிறகு சிவகாமி ஒவ்வொரு சமயம், "ஏன் அந்த ஓலையை எழுதி அனுப்பினோம்! அவ்வாறு எழுதி அனுப்ப நமக்கு என்ன உரிமை? இவ்வளவு பெரும் பிரயத்தனங்களுடனே படையெடுத்து வந்திருக்கும் மாமல்லரும் சேனாபதியும் அதைக் குறித்து என்ன எண்ணுவார்களோ! பெண் புத்தியின் பேதைமையைக் குறித்துப் பரிகசித்து இகழ்வார்களோ? ஒருவேளை அதை ஒப்புக்கொண்டு காரியம் நடத்திய பிறகு தன்னை ஏசிக் காட்டுவார்களோ?—என்றெல்லாம் எண்ணமிட்டாள்.

ஓலைக்கு உடனே மறுமொழி கிடைக்கவில்லையென்றும், ஆலோசித்துக் கூறுவதாகச் சொல்லியிருக்கிறார்கள் என்றும் தெரிய வந்தபோது அவள் மனதிற்குள் சிறிது மகிழ்ச்சி உண்டாயிற்று.

அவ்விதம் தான் ஓலை எழுதி அனுப்பியது குறித்து அவளைப் பச்சாத்தாபம் கொள்ளச் செய்த சம்பவங்கள் சிலவும் பிற்பாடு ஏற்பட்டன. கோட்டைத் தளபதி சிவகாமியின் மாளிகைக்கு வந்து விட்டுப் போனதிலிருந்து அவளுடைய மாளிகை வாச

யில் அடிக்கடி கூட்டம் சேர ஆரம்பித்தது. அநேகமாகச் சிவகாமியை மறந்து விட்டிருந்த வாதாபி மக்கள் இப்போது தங்களுக்கு நேர்ந்திருக்கும் பெரும் விபத்துக்குக் காரணம் சிவகாமிதான் என்பதை நினைவு கூர்ந்து அவள் வசித்த வீதியில் கூட்டம் போடவும், அவளைப் பற்றி இகழ்ந்து பேசவும் ஏசவும் ஆரம்பித்தார்கள். கூட்டத்தின் இரைச்சலைக் கேட்டுச் சிவகாமி அதன் காரணத்தை அறிந்து கொள்வதற்காகப் பலகணியின் வழியாக எட்டிப் பார்த்தபோது அந்த ஜனங்கள் 'ஓஹோ' என்று சத்தமிட்டும் சிரித்தும் கோரணி காட்டியும் ஏளனம் செய்தார்கள்.

விஷயம் இன்னதென்பதை ஏற்கெனவே அறிந்திருந்த சிவகாமியின் தோழிப் பெண் அவளைப் பலகணியின் பக்கத்திலிருந்து பலாத்காரமாக இழுத்துச் சென்றாள். அப்போது மறுபடியும் அந்த ஜனக் கூட்டம் விகாரமாகக் கூச்சலிட்டுக் கேலிச் சிரிப்புச் சிரித்த சத்தம் சிவகாமியின் காதில் விழுந்தது. அவளுடைய இருதயத்தில் வெகு காலத்துக்கு முன்பு எரிந்து அடங்கி மேலே சாம்பல் பூத்துக் கிடந்த குரோதத் தீயானது அந்த நிமிஷத்தில் மறுபடியும் கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. "மாமல்லர் மட்டும் உண்மையான வீரமுள்ள ஆண்மகனாயிருந்தால் நான் பேதைமையினால் எழுதிய ஓலையைக் கிழித்து எறிந்து விட்டு இந்த நகரத்துக்குள்ளே படையுடன் பிரவேசிப்பார். என்னுடைய பழைய சபதத்தை நிறைவேற்றுவார். இந்த நகரத்தை நரகமாக்கி, நாகரிகம் சிறிது மற்ற மிருகப் பிராயமான இந்த மக்கள் ஓலமிட்டு அலறி ஓடும்படி செய்வார். அந்தக் காட்சியைப் பார்த்தால்தான் என் உள்ளம் குளிரும்!" என்று எண்ணிக் கொண்டாள். அந்தக் காட்சியைத் தன் மானஸிக திருஷ்டியில் பார்த்து மகிழவும் தொடங்கினாள்.

இடையிடையே, "மாமல்லர் அவ்விதம் செய்வாரா? அல்லது கோட்டைச் சரணாகதியை ஒப்புக்கொண்டு விடுவாரா?" என்ற சந்தேகம் தோன்றி அவளைத் தணல் மேல் நிற்பதுபோல் தவிக்கச் செய்தது.

நேரமாக ஆகத் தெருவில் கூட்டமும் கூச்சலும் அதிகமாகிக் கொண்டு வந்தன. கூட்டத்திலே இருந்த சில உற்சாக புருஷர்கள் வீட்டின் கூரை மீதும் வாசற் கதவின் மீதும் கல்லை விட்டு எறிந்தார்கள். கல் கதவின் மேல் விழுந்து படார் என்று சத்தம் உண்டாக்கியபோது, கூட்டத்தில் கேலிச் சிரிப்பு பீறிட்டு எழுந்தது.

அன்று மாலை திடீரென்று அப்பெருங் கூட்டத்தில் ஒரு கணம் நிச்சப்தம் ஏற்பட்டது. அந்த நிச்சப்தத்தைக் கலைத்துக்கொண்டு பறை கொட்டும் சத்தம் கேட்டது. பறைச் சத்தம் நின்றதும் இடி முழக்கம் போன்ற ஒரு குரல், "சக்கரவர்த்தி கோட்டைக்குள் வந்து விட்டார்! பல்லவர் படையைத் துவம்ஸம் செய்து வெற்றிக் கொடி நாட்டப் போகிறார். எல்லாரும் அவரவர்கள் வீட்டுக்குப் போங்கள். ஆயுதம் எடுக்கத் தெரிந்த ஆண் பிள்ளைகள் அனைவரும் அரண்மனை வாசலுக்கு வந்து சேருங்கள்!" என்று முழங்கிற்று.

உடனே அந்த ஜனக் கூட்டத்தில் "வாதாபி சக்கரவர்த்தி வாழ்க! பல்லவ மாமல்லன் நாசமடைக!" என்ற குதூகல கோஷம் எழுந்தது. கொம்மாளமாக இரைச்சல் போட்டுக் கொண்டு ஜனங்கள் கலைய ஆரம்பித்தார்கள். ஏதோ இந்திர ஜாலத்தினால் நடந்தது போல் கண்மூடித் திறக்கும் நேரத்தில் சிவகாமியின் மாளிகை வாசலில் ஒருவரும் இல்லாமற் போயினர். அவ்விதம் வெறுமையான இடத்தில் இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் சளுக்க வீரர்கள் இருபது பேர் வந்து நின்றார்கள். சிவகாமியின் மாளிகை வாசலையும் வீதியின் இரு புறங்களையும் அவர்கள் காவல் புரியத் தொடங்கினார்கள்.

சிவகாமி தன்னுடைய தோழிப் பெண்ணின் மூலம் மேற்கூறிய சம்பவங்களுக்குக் காரணங்களை அறிந்த போது அவளுடைய மனம் ஒருவாறு நிம்மதி யடைந்தது. புலிகேசி உயிர் பிழைத்துக் கோட்டைக்குள் வந்து விட்டபடியால், இனி யுத்தந்தான்; சந்தேக மில்லை. தன்னுடைய சபதம் நிறைவேறும் காட்சியைக் கண்ணால் பார்த்தால் போதும்; மற்றப்படி

து எப்படியானாலும் ஆகிவிட்டுப் போகட்டும். மூர்க்க வாதாபி ஜனங்களாலோ ராட்சஸப் புலிகேசியினாலோ தனக்கு ஏதேனும் அபாயம் நேரக்கூடும். நேர்ந்தால் நேரட்டும். அதை எதிர்பார்த்துச் சிவகாமி கையில் கத்தி ஒன்றை ஆயத்தமாக வைத்திருந்தாள். தன்னுடைய கற்புக்குப் பங்கம் வரும்படியான காரியம் ஏதாவது ஏற்படுவதாயிருந்தால் பிராணத் தியாகம் செய்து கொள்வதென்று வெகு காலமாக அவள் உறுதிகொண்டிருந்தாள். கையில் கத்தி இருக்கிறது; கொல்லைப் புறத்துக் கிணறு இருக்கவே இருக்கிறது!

* * *

**ப**ல்லவ சைன்யம் வாதாபிக் கோட்டையைத் தாக்க ஆரம்பித்த அன்று சாயங்காலம், அந்த நகருக்குள்ளே சூறைக் காற்றும் பெரு மழையும் சேர்ந்து அடிக்கும்போது நடுக்கடலில் என்ன விதமான பயங்கர ஓசை எழுமோ அம்மாதிரி ஓசை எழுந்தது. நூற்றுக் கணக்கான யுத்த பேரிகைகளின் முழக்கம், ஆயிரக் கணக்கான தாரை தப்பட்டை சங்கம் முதலியவைகளின் ஒலி, பதினாயிரக் கணக்கான வீரர்களின் ஜயகோஷம், லட்சக்கணக்கான மக்களின் ஆரவார இரைச்சல், இந்த ஓசைகளெல்லாம் கோட்டை மதில்களிலும் மண்டபங்கள் கோபுரங்களிலும் மோதும்போது எழுந்த பிரதித்வனி எல்லாம் சேர்ந்து இன்னதென்று விவரித்துச் சொல்ல முடியாத பேரொலியாகத் திரண்டு எழுந்து கேட்போரின் உடல் நரம்புகளையெல்லாம் முறுக்கிவிட்டு உள்ளங்களை வெறி கொள்ளச் செய்தன.

அன்று சூரியாஸ்தமன நேரத்தில் அந்த மா நகரில் வாழ்ந்த பத்து லட்சம் ஜனங்களும் ஏறக்குறையப் பித்துப் பிடித்தவர்கள் போலாகித் தாம் செய்யும் காரியம் இன்னதென்று தெரியாமல் செய்கிறவர்களும் தாம் பேசுவது இன்னதென்று தெரியாமல் பேசுகிறவர்களும் ஆனார்கள்.

இத்தகைய வெறி சிவகாமியையும் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகவே ஆட்கொண்டது. ஒருகண நேரமாவது அவளால் ஓரிடத்தில் உட்கார்ந்திருக்க முடியவில்லை. ஆனால் வீட்டைவிட்டு வெளியே போவதென்பது அவளுக்கு இயலாத காரியம். சிறிது நேரம் வீட்டுக்குள்ளேயே அங்கு மிங்கும் நடந்தாள். பிறகு பலகணியின் வழியாக வாசலில் எட்டிப் பார்த்தாள். ஜனங்கள் தலைதெறிக்கக் கிழக்கேயிருந்து மேற்கேயும் மேற்கேயிருந்து கிழக்கேயும் ஓடிக்கொண்டிருந்தார்கள். வீட்டின் மேல்மச்சில் ஏறிப் பார்த்தாள். நகரின் அலங்கோலக் காட்சி இன்னும் கொஞ்சம் அதிகமாகத் தெரிந்தது. அவளுடைய மாளிகையின் பின்புறத்தில் கோட்டை மதில் வெகு சமீபத்தில் இருந்தபடியால் அதன்மீது ஏறிப் போருக்கு ஆயத்தமாக நின்ற வீரர்களின் காட்சியை நன்றாகப் பார்க்க முடிந்தது. மற்றும் வீதிகளில் அணிவகுத்துச் சென்றுகொண்டிருந்த போர் வீரர் படைகளையும் அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந்த ஜனங்களின் காட்சியையும் பார்க்க முடிந்தது.

மறுபடியும் கீழிறங்கி அவளுடைய தோழிப் பெண்ணைத் தெரு வாசலில் போய் விவரம் அறிந்துகொண்டு வரும்படி ஏவினாள். அவ்விதமே தோழி வெளியே போய் விட்டு வந்து அன்றிரவு பல்லவர் படை கோட்டையைத் தாக்கப் போவதாகச் செய்தி கொண்டு வந்தாள். அது மட்டுமல்ல. தான் அன்றிரவு சிவகாமிக்குத் துணையாக இருக்க முடியாதென்றும் யுத்த நிலைமை என்ன ஆகுமோ என்ற பீதி ஏற்பட்டிருப்பதால் தன்னுடைய சொந்த வீட்டுக்குப் போய் உறவினரோடு இருக்க விரும்புவதாகவும் கூறினாள். சிவகாமி அவளை எவ்வளவு கேட்டுக் கொண்டும் பயனில்லை. மற்றொரு வேலைக்காரியையும் அழைத்துக் கொண்டு அவள் போய்விட்டாள். அவ்விருவரும் போகும்போது மாளிகையின் கதவு திறந்த சமயம், வாசலில் காவல் புரிந்த வீரர்கள் பொறுமை இழந்து தாங்கள் மட்டும் எதற்காக அங்கு நின்று அந்த வீட்டைக் காவல் புரிய வேண்டும் என்று பேசிக் கொண்டிருந்தது சிவகாமியின் காதில் விழுந்தது. கதவைக் கெட்டியாகச் சாத்தித் தாள்கள் எல்லாவற்றையும் போட்டாள். அந்த மாளிகையின் வாசற் கதவுகள், கோபுர வாசல் கதவுகளைப் போன்ற பெரிய கதவுகள். ஒரு கதவில்

திட்டி வாசல் ஒன்று இருந்தது. அதாவது ஒரு மனிதர் உள்ளே நுழையக் கூடிய அளவு துவாரமும் அதற்கு ஒரு தனிக் கதவும் தாழ்ப்பாளும் இருந்தன. தோழியும் வேலைக்காரியும் அதன் வழியாகத்தான் வெளியே சென்றார்கள்.

சிவகாமி வாதாபியில் வசித்த காலத்தில் சாதாரணமாகவே சொற்ப நேரந்தான் தூங்குவது வழக்கம். அன்றிரவோ அவள் கண்ணை மூடவே இல்லை. "வெளியே என்ன நடந்து கொண்டிருக்கிறது? என்ன நடக்கப் போகிறது?" என்று அறிந்துகொள்ள அவளுடைய உள்ளமும் உடம்பின் நரம்பு ஒவ்வொன்றும் துடித்துக் கொண்டிருந்தன. அடிக்கடி பெருமூச்சு எழுந்தது. நெஞ்சு தடக் தடக் என்று அடித்துக் கொண்டது. அடி வயிற்றை என்னவோ செய்தது.

இரவு ஆக ஆக. கண்கள் எரிய ஆரம்பித்தன. நெற்றியின் பொட்டுக்களில் வலி உண்டாயிற்று. தலையில் ஒருவித மயக்கம் ஏற்பட்டது. ஆனால் ஸ்மரணை இழந்து கீழே விழும் அளவிற்கு அது முற்றவில்லை. அறிவும் உணர்ச்சியும் தெளிந்திருந்தன.

நடுநிசி ஆனபோது, நகரில் பல இடங்களில் வீடுகள் தீப்பற்றி எரிய ஆரம்பித்ததைச் சிவகாமி தன் மாளிகையின் மேல் மாடியிலிருந்து பார்த்தாள். ஒன்பது வருஷத்துக்கு முன்னால் தான் செய்த சபதம் நிறைவேற ஆரம்பித்து விட்டது என்பதைத் தெரிந்து கொண்டாள். அவளுடைய வாழ்க்கையில் அதுவரையில் அவள் அனுபவித்திராத திருப்தி அவள் மனதில் அப்போது ஏற்பட்டது. அதே சமயத்தில் காரணம் தெரியாத விவரிக்க முடியாத ஒருவித மன வலியும் உண்டாயிற்று.

நகரிலே நாலாபுறமும் தீ பரவி வந்தது. அன்று சாயங்காலம் அந்நகரில் ஏற்பட்டிருந்த மகத்தான ஆரவாரம் இப்போது வேறு ஸ்வரூபத்தை அடைந்தது. குதூகலமான ஜய கோஷங்கள் அலறலும் ஓலமுமாக மாறின. மக்களின் பெருமித வீர நடையானது பயப்பிராந்தி கொண்ட ஓட்டமாக மாறியது. வர வர ஸ்திரீகள், குழந்தைகளின் ஓலமும் ஓட்டமும் அதிகமாகி வந்தன. இதையெல்லாம் பார்க்கச் சிவகாமியின் மனதில் திருப்தி மறைந்து வேதனை அதிகமாயிற்று. கடைசியில், அந்தக் கோரக் காட்சிகளைப் பார்க்கச் சகிக்காமல் மேல் மாடியிலிருந்து கீழே இறங்கினாள்.

"ஆகா! இது என்ன நம்மால் விளைந்து விட்டதா? இதன் முடிவுதான் என்ன? இந்தப் பெரிய நகரம் முழுதும் உண்மையாகவே எரிந்து அழிந்துவிடப் போகிறதா? இதிலே வசிக்கும் இத்தனை லட்சக் கணக்கான மக்களும் பெண்களும் குழந்தைகளும் செத்து மடியப் போகிறார்களா? ஐயோ! இது என்ன? என்னுடைய கதி என்ன ஆகப் போகிறது?" என்று அவள்



ளத்தில் ஆயிரக் கணக்கான
தனை அலைகள் கொந்தளித்து
ந்து உடனே மறைந்தன.

அப்புறம் மேல் மாடிக்கே போக
மில்லாமல் விட்டுக் கூடத்தில்
ருமிங்கும் நடந்து கொண்டிருந்
ள். அலைந்து அலைந்து கால்கள்
த்து வலி எடுத்துப் போயின.
ருக் தரையில் குப்புறப் படுத்துக்
ண்டாள். அழுகை வந்து கண்ணில்
பெருகினால் தேவலை யென்று
ான்றியது. ஆனால் அழுகையும் வர
லை; கண்ணீர் சுரக்கும் இடத்தில்
தா அடைத்துக் கொண்டு கண்ணீர்
வெட்டாமல் செய்துவிட்டது.

பொழுது விடியும் சமயம் ஆயிற்று. முற்றத்தில் உதய நேரத்துக்குரிய மங்கலான வெளிச்சம் காணப்பட்டது. அச்சமயம் அந்த வீட்டு வாசலில் ஒரு பெரும் ஆரவாரம் கேட்டது.

சட்டென்று சிவகாமியின் மனதில் ஒரு எண்ணம் உதித்தது. ஒரு வேளை மாமல்லர்தான் வருகிறாரோ? தன் சபதத்தை நிறைவேற்றித் தன்னை அழைத்துக் கொண்டு போவதற்காக வருகிறாரோ? அப்படியானால் ரொம்ப நல்லது. இந்த மா நகரின் படுநாசத்தை இப்போதாவது தடுக்கலாம். அவர் காலில் விழுந்து ''பிரபு! போதும்! நிறுத்துங்கள்!'' என்று கெஞ்சலாம்.



இப்படி எண்ணியவளாய்ச் சிவகாமி பரபரவென்று எழுந்து ஓடினாள். கதவண்டை சென்றதும் சிறிது மனம் தயங்கிற்று. எல்லாவற்றிற்கும் திட்டி வாசற் கதவைத் திறந்து பார்க்கலாம் என்று திறந்தாள். அங்கே தோன்றிய காட்சி அவளைத் திகைத்துப் பீதியடையச் செய்தது. மாமல்லரையோ பல்லவ வீரர்களையோ அங்கே காணவில்லை. கோபங்கொண்ட வாதாபி ஜனக் கூட்டந்தான் காணப்பட்டது. அந்தக் கூட்டத்தாரில் சிலர் வீட்டைக் காவல் புரிந்த சளுக்க வீரர்களுடன் ஏதோ வாதாடிக் கொண்டிருந்தார்கள்.

சிவகாமியின் முகம் திட்டி வாசலின் மூலம் தெரிந்ததும் அந்த ஜனக் கூட்டத்தில் பல நூறு சிறுத்தைப் புலிகளின் உறுமல் சத்தம் போன்ற ரோமம் சிலிர்க்கச் செய்யும் சத்தம் உண்டாயிற்று. கூட்டத்திலே பலர் காவல் புரிந்த வீரர்களைத் தள்ளிக் கொண்டு வீட்டு வாசற்படியை நோக்கிப் பாய்ந்து வந்தார்கள்.

சிவகாமிக்கு நிலைமை ஒருவாறு புலப்பட்டது. சட்டென்று திட்டி வாசலை மூடினாள். அவசரத்தினாலும் பயத்தினாலும் அதைத் தாளிட மறந்து போனாள். உடனே அங்கிருந்து மாளிகையின் பின் கட்டை நோக்கி விரைந்து சென்றாள். திட்டமான யோசனையுடன் செல்லவில்லை. அந்தச் சமயம் அந்த மூர்க்கங்கொண்ட ஜனங்களிடமிருந்து தப்ப வேண்டுமென்று இயற்கையாகத் தோன்றிய எண்ணம் அவளுடைய கால்களுக்குப் பலத்தை அளித்து வீட்டின் பின் கட்டை நோக்கி விரைந்து ஓடச் செய்தது.

வீட்டுப் பின்கட்டின் வாசற்படியைத் தாண்டித் தாழ்வாரத்தை அடைந்ததும், உதய நேரத்தின் மங்கிய வெளிச்சத்தில் அங்கு ஓர் உருவம், — கபாலங்களையும் எலும்புகளையும் மாலையாகப் பூண்ட கோரமான ஸ்திரீ உருவம் — நிற்பதைச் சிவகாமி பார்த்தாள். அவளுடைய உடம்பில் இரத்த ஓட்டம் ஒரு நிமிஷம் நின்று விட்டது. தேகமாத்திரத்தும் ரோமங்கள் குத்திட்டு நின்றன. சிவகாமியைப் பார்த்ததும் அந்தப் பெண் பேய் கலகலவென்று சிரித்தது. பிறகு, "அடி அழகி சிவகாமி! கலைவாணி சிவகாமி! மாமல்
லனையும் நாககந்தியையும் ே
வலைக்கு உள்ளாக்கிய நீலி! உன்
கெல்லாம் இப்போது என்ன செய்
உன் கண் மயக்கும், மோகமினுக்
உன்னை இப்போது காப்பாற்றும
என்று அந்தப் பெண் பேய் கே
விட்டு மறுபடியும் சிரித்தது.

"அடி சிவகாமி! நானும் உன்
போல் ஒரு சமயம் கண்டவர் மயங்
மோகினியாகத்தான் இருந்தே
உன்னாலே இந்த கதிக்கு ஆளாே
அதற்குப் பழி வாங்கும் சமயத்
காக இத்தனை காலம் காத்திரு
னடி!" என்று பல்லைக் கடித்
கொண்டு கூறியவண்ணம் காபா
தன் மடியில் செருகியிருந்த கத்தி
சட்டென்று எடுத்து ஓங்கினாள்.

சிவகாமிக்கு அப்போது சி
செய்யும் சக்தியோ, தப்பி
கொள்ள யுக்தி செய்யும் சக்தி
சிறிதும் இல்லை. அவள் உள்
ஸ்தம்பித்துப் பிரமை கொண்
தது. எனினும் எத்தகைய ஆ
லிருந்தும் தன் உயிரைக் காப்பா
கொள்வதற்கு முயற்சி செய்யும்
கைச் சுபாவத்தை ஒவ்வொரு ஜீவ
கும் இறைவன் அளித்திருக்கி
அல்லவா? அந்த சுபாவம் கா
மாகச் சிவகாமி ஒரு அடி பின்
நகர்ந்தாள்.

அந்தக் கணத்தில் காபாலிகைக
பின் புறத்தில் அவள் அறியாமல்
உருவம் திடீரென்று தோன்றியது.
கட்டின் வாசற்படி வழியாக நுழை
அந்த உருவம் காபாலிகையின்
பிடித்த கையைச் சட்டெ
கெட்டியாகப் பிடித்துக் கொண்ட

அந்தப் பிடியின் பலத்தினால் கா
லிகையின் கை விரல்கள் விரிந்து
கீழே விழுந்தது. சொல்ல முடி
குரோதத்துடன் காபாலிகை திரும்
பார்த்தாள்.

"அட பாவி! நல்ல சமயத்
வந்து விட்டாயா?" என்றாள்.

அப்படி அதிசயமாகத் திடீரெ
தோன்றித் தன் உயிரைக் கா
உருவத்தைச் சிவகாமியும் அப்போ
உற்றுப் பார்த்தாள்.

அந்த உருவம் வாதாபி சக்கரவ
புலிகேசிதான் என்று தெரிந்தபோ
சிவகாமிக்கு உண்டான வியப்
திகைப்பும் எல்லையற்றவையாயின

# நியாயவா

எம். எஸ். கமலா

விமலகுமாரி துவண்டு
தான் கட்டிலில். வேலைக்காரி
கொரு முறை படுக்கை யறை
யில் வந்து எட்டிப் பார்த்துப்
மூச்சு விட்டபடி சென்றான்.
வயதுள்ள கனியும் எழு
துள்ள யதீந்திரனும் வேலை
னிடம், "தோமா! அப்ப
பார்க்க இன்னிக்குப் போவோ
என்றனர்.

கண்களில் கலங்கும் நீரை
யில் சுற்றியிருக்கும் துவ
துடைத்துக்கொண்டு, "போ
என்றான் தோமா மங்கிய கு

"தோமா! நீ கெட்டவன்
மும் எங்களை ஏமாத்தறே!
பாவை நாங்கள் பார்க்க
டாமா? இன்னிக்குத்தான்
வேணும். அதோ பார், கிரு
அப்பா விபுவை எடுத்துக் கொ
போறார்!" என்றதும் கனி
கண்களில் நீர் வழிந்தது.

அங்கே விளையாடிக்
டிருந்த மூன்று வயதுள்ள
பத்திரிகை விற்கிறவன் கொ
சென்ற தினசரியை எ
கொண்டு தாயிடம் ஓடினான்.
குழந்தைகள் வேலைக்கார
பேசுவதைக் கேட்டுத் துக்கத்
பொருமிக் கொண்டிருந்த
குமாரி, தன் கணவனையே உ
கொண்டு நிற்கும் மூர்,
எடுத்து மார்புடன் அணை
கொண்டு, பத்திரிகையைப்
தாள். இரண்டாம் பக்
ஒரு கம்பீர மனிதனின்
படம் பிரசுரமாகி யிருந்தது.
படத்தின் கீழே "இந்த-3
சச்சரவுகளின் காரணமாக
பெரிய மனிதர்களைச் சிறை
திருப்பதை வாசகர்கள் அறிவ
இந்தச் சச்சரவை நன்கு ஆரா
தீர்ப்பளிப்பதற்காக வெ

ய சர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்
க்பராலி என்பவர் இவர்தான்" என்று
தும் அவள் தன் கண்களை நன்
திறந்து பார்த்தாள். சற்று நேரம்
யோசனையில் ஆழ்ந்தாள். அவள்
ளையில் உலகமே ஒரு முறை சுழன்
வெளியில் யதீந்திரன் வேலைக்கார
பேசுவது மறுபடியும் காதில்
து.

லைக்காரி, "அம்மா!" என்றாள்.

ன்னடி, சம்பா?"

தாவிலும் கொஞ்சம்......" என்றும்
ர், "என்டி! உனக்குப் பைத்தியம்
யம் ஒன்றுமில்லையே! போய்க்
தகளுக்குப் போடு; நீ சாப்பிடு!" என்
மலகுமாரி பலஹீனமான குரலில்.

## 2

அக்பராலி இந்து - முஸ்லிம் கலக
ந்சம்பந்தமான கட்டுகளைப் பார்த்துக்
ண்டிருந்தார்.
றுகில் நின்று
ின் இன்ஸ்பெக்
ியாம் பிரஸாத்
ஜி தாம் கண்
ப் பார்த்த
ல் கோர்ட்டின்
ளையை விளக்
கொண்டிருக்
அன்றையத்
களை வாயிற்
பான் கொண்டு
வைத்துச் சென்றான். அவர் ஒவ்
கடிதமாய்ப் படித்துக் கொண்டே
பிரஸாத் சொல்வதைக் கேட்டுக்
ண்டிருந்தார்.

க்கள் இந்து என்று நான் உயர்த்திச்
லலையா? அந்த ஸ்ரீதேந்த்ரநாதன்
ு பிசகுதான். அவன் ரஹீமை
ப் அடித்து விட்டான். ஏறக்குறைய
டு மாதமாகிறது. அவனுக்குப் பட்ட
ல்ல அடி. அது ஆளை அடியுடன்
ரறு விடும். அந்த உத்தேசத்துடன்
அவன் அடித்திருக்கிறான். இல்லா
இவ்வளவு அபாயகரமான நிலை
க் காரணமில்லை. ஆகவே அது
செய்ய முயன்ற குற்றம்தான்!"

ப்படியா! அவன் தரப்பில் யார் பேசு
ன்?" என்று கேட்டபடியே இன்
கவரைக் கிழித்தார் அக்பராலி.

அது இளம் ரோஜா நிறக் கடிதம். நல்ல ரோஜா அத்தரால் நனைக்கப்பட்டிருந்தது. வெளியில் கடிதத்தை எடுத்ததும் குபீரென்று ரோஜாவின் வாசனை மணத்தை மயக்கியது. அதனுள் இரத்த அக்ஷரங்களைப் போல் சிவப்பு மையால் எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள் மின்னின. அந்த வாசனையில் ஷியாம்பிரசாத் முகர்ஜியே சற்று மயங்கி விட்டார். ஆனாலும் சமாளித்துக் கொண்டு, "ஸ்ரீதேந்த்ரன் நல்ல பணம் படைத்தவன். எம். ஏ. பட்டதாரி. அவனுக்குப் பணத் திமிர் அதிகமுண்டு. முஸ்லிம்கள் என்றாலே வெறுப்பான். பழைய கால க்ஷத்திரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். இந்து-முஸ்லிம் சச்சரவின் ஸ்தாபகன் அவன்தான்...!"

"மிஸ்டர் முகர்ஜி! எனக்கு அவசர வேலையிருக்கிறது. நான் உங்களை நாளைக்குப் பார்க்கிறேன்" என்று கூறி, "தர்வான்!" என்று அழைத்தார். ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் சத்தமில்லாமல் அகன்றார். தம் கையிலிருந்த கடிதத்தை மறுமுறை படித்தார் அக்பராலி. அவர் கண்களில் கோபக் கனல் வீசியது.




"அண்ணா! என்னை நீ மறந்திருக்க மாட்டாய். இந்த வழக்கை விசாரிப்பதற்காக நீ நியமிக்கப் பட்டிருப்பது என் அதிருஷ்டம் தான். எத்தனையோ பெரிய பெரிய சட்ட நிபுணர்களெல்லாம் இருக்கும்போது சர்க்கார் உன்னை அமர்த்தியிருப்பது என்னுடைய அதிருஷ்டமின்றி வேறு என்ன? உன்னுடைய அருமை சகோதரி லீலா, பவானியின் மேல் பாரத்தைப் போட்டு விட்டுக் கண்ணீருடன் கதறும்போது, எதிர்பாராமல் நீயே நியாயாதிபதியாய் வந்திருக்கிறாய். என் மாங்கல்யத்தின் மேல் இனி எனக்குப் பயமில்லை; நான் சௌபாக்கிய வதியாயிருப்பேன்.

உனது காலடியில் மாங்கல்யப் பிச்சை வேண்டி நிற்கும் உன் அருமைச் சகோதரி,

விமலகுமாரி ஸ்ரீதேந்த்ரநாதன்."

அக்பராலியின் தலை சுழன்றது. கடிதத்தை மடித்து உறையில் இட்டார். கண்களை மூடிக்கொண்டு அப்படியே ஆசனத்தில் சாய்ந்தார். அவர் முன் ஓர் திரை. பள்ளிக்கூடத்தில் அன்று வாத்தியார் வெகு கோபத்துடன் சீறிக்கொண்டு, அவருக்குத் தோன்றிய கேள்விகளையெல்லாம் சிறுவர் சிறுமியரைக் கேட்டார். யாரும் சரியான விடை யளிக்க முடியாமல் தத்தளித்தனர்.




வாத்தியார் எல்லோரையும் பிரம்பால் பதம் பார்த்துக் கொண்டிருந்தார். அக்பராலி நடுங்கிக்கொண்டு நின்றிருந்தான். அவனுக்கு விடை தெரியும். வாத்தியாரின் சினம்கொண்ட முகம் அவன் வாயைக் கட்டி விட்டது. அதே சமயம் வாத்தியார் வாயிலிருந்து கேள்வி புறப்பட்டது. வாத்தியார் சுவரின் மூலையில் கூடு கட்டிக் கொண்டிருந்த சிலந்தியைப் பார்த்துக்கொண்டிருந்தார். வாத்தியார் கேட்ட கேள்விக்கு அக்பர் அருகில் நின்றிருந்த பதின்மூன்று வயதுச் சிறுமி சரியான விடை சொல்லி விட்டாள். வாத்தியார், "பேஷ்! யார் சொன்னது?" என்றார். விடை பளித்த பெண் தைரியமாய், "அக்பராலி ஸார்!" என்றாள். அக்பர் நன்றி யறிதலுடன் அவள் முகத்தைப் பார்த்தான். அவள் முகம் கம்பீரத்துடன் பொலிந்தது. அவள் யார்? அன்றுதான் புதிதாய் எட்டாவது வகுப்பில் சேர்ந்தவள். அதனால் அவள் குரலை வாத்தியார் சரியாய் அடையாளம் கண்டு கொள்ள வில்லை. மேலும் அவள் மெய்யைச் சொன்னாள். வாத்தியாரின் கோபத்தைக் கண்டு நடுங்கிக்கொண்டிருந்த சிறுவர் சிறுமியரும் அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அன்றிலிருந்து அப் பு[...] பெண் அக்பராலியின் உயிர்த் தோழி.

இரண்டு வருடங்களில் அவள் [...] தடைந்து விட்டதால் பள்ளியை வி[...] நிறுத்தப்பட்டாள். ஆனால் அக்பர் மாத்தி[...] அவள் வீட்டுக்குச் சென்று அவ[...] பார்த்து அளவளாவி வருவான். அ[...] கலாசாலையில் படிக்க நகரத்துக்குச் செ[...] றான். அச் சமயம் அவளுக்கு விவாகம[...] விட்டது. பிறகு அவன் அவளைப் பார்[...] வில்லை. பத்து வருடங்களுக் கப்பு[...] இன்று அவன் அன்பிற்குகந்த அப் பெ[...] ணின் கடிதம் அவனைச் சென்ற நாட்கள் நினைவுச் சுழலில் இழுத்தது.

3

அன்று இரவு யதீந்திரனும் [...] தூங்கிக் கொண்டிருந்தனர். குழந்[...] மூர்த்தி கட்டிலில் படுத்துச் சிரித்துக்கொ[...] டிருந்தான். உலகம் முழுவதும் தூங்[...] கொண்டிருந்த அந்த நேரத்தில் அ[...] உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருந்த[...] தன் மைந்தனின் சிரிப்பைப் பார்த்[...] 'வாழ்க்கையே சிரிப்பிற் கிடமோ?' என்[...] அவள் மனதில் தோன்றியது. அ[...] கண்கள் நீரைச் சொரிந்தன.

அச் சமயம் சோமா அவளிடம் வ[...] "அம்மா! யாரோ உங்களைப் பார்க்க [...]திருக்கிறார்" என்றான். அவள் ம[...]து துணுக்குற்றது. தலைமேல் துணியை சரியாய்ப் போட்டுக் கொண்டு வெளி[...] வந்தாள். ஹாலில் நின்றிருந்தான் [...]பராலி. அவனைச் சற்று நேரம் உ[...] பார்த்தாள். "அண்ணா!" என்று அ[...] காலடியில் வீழ்ந்து கதறினாள்.

"ஏன் அழுகிறாய், விமல்! அழாதே [...] அழுதால் நான் பொறுக்க மாட்டேன்!"

"அண்ணா! எனக்கு மாங்கல்யப் பிச்[...] கொடு! 'கொடுத்தேன்' என்று சொன்[...] தான் உன் காலை விடுவேன்' என்[...] அவள் கதறினாள்.

"விமலா! எனக்கு இந்த வழக்கின் [...] காரமே சரிவரத் தெரியாது. எல்லா[...] றையும் சரிவர ஆராய்ந்து நியாயமாய்த்[...] நடப்பேன். நீ கவலைப்படாதே! விஷ[...] என்ன? சொல்."

அவள் தன் கண்களைப் புடவைத் த[...] பால் துடைத்தபடியே எழுந்தாள். அவள் அசாதாரண சௌந்தர்யம் எப்பேர்ப்பட்ட ஜிதேந்திரியனையும் மயக்கும் மென்பதில்

ல. அவன் தலைமேலிருந்த துணி சரிந்து
ந்தது. தரையைத் தொடும் அவனு
ப நீண்ட கூந்தல் சரியான போஷிப்பில்
ல் சிக்குண்டு சிதறிக் கிடந்தது.

அண்ணா, வா! உள்ளே வந்து பார்,
மருமகன்களையும் மருமகளையும்!"
று அவனைத் தன் சயன அறைக்குள்
ந்துச் சென்றாள்.

அண்ணா! இம் மூன்று சிசுக்களின் மேல்
ணயாகச் சொல்கிறேன். இவ்வுலகில்
ர், சகோதரனாகிய நீ, உங்களிருவரைத்
ர எனக்கு யாருமில்லை. யதீந்திரன்
ப்பதற்கு முன்பே அப்பாவும் அம்மாவும்
ந்து விட்டனர். பாழாய்ப் போன இந்த
ாலிப் பண்டிகைக்கும், சண்டைக்கும்
தங்கிய சம்பந்தம் போலிருக்கிறது. உன்
த்துனர் ரொம்ப நல்லவர். இதோ படுத்
க்காளே சின்னவள், எல்லாம் தத்ரூபம்
த்தான். எனக்காக எதை வேண்டு
னாலும் செய்வார்!"—இப்படிச் சொல்லும்
து அழுது சிவந்த முகம் வெட்கத்தால்
னும் அதிகமாய்ச் சிவந்து சோபை
த்தது.

இந்த வருஷம் ஹோலியின் போது
ந்த வீட்டு வாசற் தெருவில் விளை
க் கொண்டிருந்த அவன், ரேசன்மேல்
ள நீரைத் தெளித்தான். அச் சமயம்
தகப்பனார் தெருவில் போய்க் கொண்
ந்தார் போலிருக்கிறது. அந்தச் சாயத்
ண்ணீர் அவர்மேல் பட்டு விட்டது.
துக்க வென்றாலே எரிந்து விழும் உன்
ந்தையின் மேல், அதிலும் உங்களுக் கெல்
பெரிய குரு போன்றவர்மேல் பட்டால்
க வேண்டுமா? கூட்டம் கூடிவிட்டது.
ச்சண்டையி லிருந்து கைச் சண்டையும்
டக்கி விட்டது. நான் உள்ளே காம
யனைப் பூஜித்துக் கொண்டிருந்தேன்.
குரல் அதிகமாய்க் கேட்டது. ஒன்று
ல்லை மறந்து போனேனே! உன் மைத்
ர் என்னைப் பர்தாவுக்குள் சிறை
ப்பதில்லை. அதற்குள் யதீந்திரனின்
ம்மா! அப்பாவை எல்லாரும் அடிக்கறா!"
என்ற குரல் கேட்டதும் வெளியில் ஓடி வந்தேன். அவரை எல்லோரும் சூழ்ந்து கொண்டிருந்தனர். பெண்ணென்றால் எல்லோரும் சற்று விட்டுக் கொடுப்பார்களே என்று 'சகோதரர்களே! சமாதானமாய்ச் செல்லுங்கள். நமக்குள் சண்டை சச்சரவு வேண்டாம்!' என்று சொல்லும்போதே, "தேகோ பாய் சௌனி!" (பாருங்கடா, தேவடியாள்!) என்று உங்கப்பா இரைந்தார். உன் மைத்துனருக்குச் சீறிக் கொண்டு வந்தது கோபம். அருகிலிருந்த வர்ணக் குழாயை எடுத்தார். நான் அதை மறித்துக்கொண்டு நின்றேன். அவர் கையிலிருந்த குழாய் கீழே இறங்கவில்லை. என் மண்டையில் பெரிய அடி விழுந்தது.

"நான் கண் திறந்தபோது வீடு அமைதியாயிருந்தது. அவர் சிறை சென்று ஐந்து நாட்களாயிற்று என்று கேள்விப்பட்டேன். வீட்டில் போலீஸ்காரர்களின் அட்டகாசம். உன் மருமான் யதீந்திரன் தான் சொன்னான்: எனக்குப் பின்புறமிருந்த ஒரு முஸ்லிம் சகோதரர் என் தலையிலடிக்கவே கத்திவீச்சு, குஸ்தி முதலியவைகளில் பழகிய உன் மைத்துனர் கோபத்துடன் கையிலிருந்த வர்ணக் குழாயைச் சுழற்றிக்கொண்டே ஓடி என்னைத் தாக்கியவன்மேல் வீசினாராம். அவன் சுழன்று தரையில் சாய்ந்தானாம். அவரைப் போலீஸ்காரர்கள் அழைத்துச் சென்றார்களாம்.

"அண்ணா! உன் தங்கையின் வாழ்க்கை விளக்கை அணைத்து விடாதே! பிரகாசிக்கச் செய். இருட்டில் கண்ணில்லாக் குழந்தைகள் தடுமாறுவார்கள். அப்படி ஏதாகிலும் விபரீதம் ஏற்படுமென்றால் அதையும் சொல்லி விடு. உன் சகோதரியின் குழந்தைகளை இன்றே நீ அழைத்துச் செல். அவள் சௌபாக்கியவதியாய் அவருக்கு முன் அவரை வரவேற்க அமர நாட்டுக்குச் செல்வாள்!" என்று சொல்லி விமலகுமாரி பெருமூச்சு விட்டாள்.

அக்பரின் கண்களில் நீர் ததும்பிவிட்டது. "விமல்!" என்றான் பரிதாபமாய்த் தன்




"என் மாமி! உங்க ஆத்துக்காரர் யாரோடு ஒரு நாழியாகப் பேசிண்டு இருக்கார்?"




"யாரோடேயும் பேசிண்டு இல்லை; தனக் தானேதான் பேசிண்டு இருக்கிறார்!"

உள்ளத்தில் தோன்றியதை மறைத்துக் கொண்டு. அவன் நீர் தேங்கிய கண்களுடன் அவளை நிமிர்ந்து பார்த்தான். அவன் "விமல்! நியாயம் இருக்கும் பக்கம் சாய்ந்து 'நியாயவான்' என்ற பெயரை நிலை நாட்டுவேன். தந்தையோ, தங்கையோ நியாயத்திற்கு மேற்பட்டவர்களல்ல" என்றான் மெலிந்த குரலில் தன் கடமை தொனிக்க.

அவள் கண்களில் கோபக் கனல் வீசிற்று. "அண்ணா! உன் தங்கை நீதியை மணந்து நீதிக்காக உன்னை அழுது மயக்கவில்லை. சத்தியசந்தரை மணந்தேன். சத்தியத்திற்காக......அபராதி யல்லாதவனை தண்டனைக் குள்ளாக்கி என்னை.........அண்ணா! அவர் இந்த இந்து-முஸ்லிம் சச்சரவின் காரணமாகத் தண்டனை யடைந்தால் நான் வருந்த மாட்டேன். க்ஷத்திரியன் சாவுக்கோ, சிறைக்கோ பின் வாங்குபவ னல்ல. ஆனால் நான் என் வாழ்க்கைத் துணைவனை விட்டு இருக்கமாட்டேன், அண்ணா!" என்று படுக்கையில் படுத்திருக்கும் குழந்தைகளைக் கலங்கிய கண்களுடன் பார்த்தாள்.

"விமல்! க்ஷத்திரிய தர்மத்தையோ தைரியத்தையோ இன்றைக்கா என் முன் எடுத்துச் சொல்கிறாய்? வெகு நாட்களுக்கு முன்பே அது எனக்குத் தெரியுமே! என் வாழ்க்கை வழியில் நான் மறக்காத ரோஜா மலரை இன்று மத்தியானம் பிரத்தியக்ஷமாகக் கண்டேன். விமல்! இன்று உன்னைப் பார்ப்பேன் என்று நினைக்கவில்லை. கடவுள் பெரியவர். ஒரு புறம் தந்தை. மறுபுறம் தங்கை. நடுவில் நியாயம். என் புத்தி எந்தப் பக்கம் சாயுமோ? ஆனால் விமல்! நடுநிலையில் நின்று நியாயம் வழங்குவேன். கடவுள் ரக்ஷிப்பாராக. நான் வருகிறேன், விமல்!" என்றான் தைரியமாக.

அவன் சத்திய வாக்கு அவளைத் திடங் கொள்ளச் செய்தது. ஆனாலும் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. "அண்ணா! குழந்தைகள், 'அப்பா! அப்பா' என்று அலறுகிறார்கள். நீ அவரைப் பார்த்ததில்லையே! பார், அண்ணா!" என்று கட்டிலுக்கு மேல் சுவரில் தொங்கும் ஜிதேந்திரனின் படத்தைச் சுட்டிக் காட்டினாள். அப்படத்தைப் பார்த்ததும் அக்பரின் மனம் விண்டுவிடும் போலாயிற்று. பரிபூரண அழகுள்ள அவளை விட்டு விமல் எப்படி யிருப்பாள்? இனி அங்கு நின்றால் தன் மனம் இளகி ஏதாகிலும் சொல்ல நேர்ந்துவிடும். அதன்படி நடக்க இயலுமோ இல்லையோ என்று யோசித்தவனாய், "விமல்! குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு தைரியமாயிரு. அழுதுகொண் டிருக்காதே; நான் இங்கு வந்ததே பெரிய குற்றமாகிவிடும். கடவுள் இருக்கிறார்......!" என்று சொல்லிச் சென்றார் அக்பரலி.

## 4

அன்று கோர்ட் ஜனமயமாய் இருந்தது. நியாயாதிபதி அக்பரலியின் தந்தை ருஸ்தும் அலி இந்து - முஸ்லிம் சச்சரவில் பிரதான புருஷர். ஆதலால் கோர்ட்டில் அக்பரலி எவ்விதமான தீர்ப்பை யளிப்பான் என்பதை எல்லோரும் அறிந்தே இருந்தனர். ஆனாலும் தந்தை அபராதி; தனயன் நியாயவாதி. இவ் விசித்திர சம்மேளனத்தைப் பார்க்கவே ஜனங்கள் கூட்டம் கூடினர். ருஸ்தும் அலியோ வெனில், தன் மகனே நியாயாதிபதியாய் வந்ததினால் தன் குற்றம் குறை வெளியாகாதென்றும், பணக்காரனாயிருந்தும் ஒன்றிலும் ஒட்டியும் ஒட்டாமலும் இந்து - முஸ்லிம்களின் சச்சரவிற்கு இடைஞ்சலாயிருக்கும் ஜிதேந்திரனை



"அப்படின்னு ஏன் இப்படி இரைந்து பேசிண்டிருக்கார்?"



"அவருக்குக் காது செவிடோன்னோ, அதனாலேதான்!"

நன்கு தண்டித்து விட்டால், அப் புகைச்சலால் இந்து - முஸ்லிம்களின் துவேஷம் அதிகமாகி அடிதடி ஆகும். அச்சமயம், தான் முஸ்லிம்களின் தலைவன் என்பதை ஸ்தாபித்து, இந்துக்களைத் தன்னாலான மட்டும் ஹிம்சைப்படுத்தலாமென்று நினைத்துத் தம் சகோதரக் கைதிகளிடமும் சொல்லிச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்.

கோர்ட்டில் சுமார் இருநூறு கைதிகளுக்கு மேல் நின்றிருந்தனர். நியாயாதிபதி அக்பரலி தம் ஆசனத்தில் கம்பீரமாய் அமர்ந்திருந்தார். அவர் கைதிகள் நிற்கும் இடத்தைச் சுற்றிப் பார்த்தார். இளைத்துத் துரும்பாய்த் தாடியும் மீசையுமாய் நிற்கும் ஒருவனை உற்றுப் பார்த்தார். "ஜிதேந்திரனாயிருக்கலாமோ?" என்று நினைத்தார். வாதப் பிரதிவாதங்கள் நடந்து கொண்டிருந்தன. அக்பரலி ஒன்றிலும் சிரத்தையில்லாமல் அமர்ந்திருந்தார். சேதாமாவுடன் குழந்தை யதீந்திரன் இருந்தான். ஜிதேந்திரனைக் கூண்டில் ஏற்றினதும், "அப்பா! அப்பா!" என்று வீறிட்டான். அக்பரலி நிமிர்ந்து பார்த்தார். ஜிதேந்திரன் சிரிப்பய மான கண்களுடன் தைரியமாய்ச் சங்கடத்தை எதிர்கொண்டழைக்கும் மார்புடன் நல்ல கட்டுமஸ்தான தோள்களுடன் கூண்டில் நின்றிருந்தான். ஜிதேந்திரனின் வாக்குமூலம் வாங்கினர்கள். ஒருவிதமாய் விசாரணை முடிந்தது. நியாயாதிபதி அக்பரலி தமது தீர்ப்பை வெளியிட்டார். அவர் கம்பீரக் குரலொலி கோர்ட்டையே அதிரச் செய்தது.

"இந்து-முஸ்லிம் சச்சரவு இவ் வருஷம் இரண்டு முறை நடந்ததாகவும், ஆனால் இம்மாதிரி இத்தனை மோசமாய் நடக்கவில்லையென்றும் அறிகிறேன். ஹாஷிமின் காரணமாய் இத்தனை ஜனங்களுக்கு அடியும் காயங்களும், உயிர்ச்சேதங்களும் நடந்ததையறிந்து மிகவும் வருந்துகிறேன். இந்து, முஸ்லிம், ஸீக், ஹரிஜன் இப்படி பற்பல ஜாதி, மதம் என்பதை அறவே ஒழித்து, நம் பாரத புத்திரர்கள் பாரதீயர்கள் என்று ஒரு முகமாய்ப் பறைசாற்ற வேண்டிய இந்த காந்தி யுகத்தில், கேவலம் இந்து முஸ்லிம் என்ற காரணமாய்ச் சண்டையிட்டு மண்டை உடைத்துக் கொள்வது அவிவேகத்தனமும், சிரிப்பிற் கிடமுமாகிறது. இனிமேலாகிலும் இம்மாதிரி நிந்தரப்பட்ட சச்சரவு நடவாமல் இருக்க வேண்டியது உங்கள் கைகளில் இருக்கிறது. குற்றவாளிகளின் தண்டனையைச் சொல்கிறேன்.

"வயது சென்றவரும் நல்ல அனுபவமும் உள்ளவராகிய ருஸ்தம் அலி, இம்மாதிரி சச்சரவிற்கு மூலகாரணராயிருப்பது துக்கத்தையே யளிக்கிறது. அவரே இதற்கெல்லாம் அஸ்திவாரமாயிருந்திருக்கிறார். ஆகவே அவருக்கு ஏழு வருஷம் சிக்ஷை அளிக்கப்பட்டிருக்கிறது. அவர் சொற்படி நடந்தவர்களுக்கு இரண்டு வருடக் கடுங்காவல். இதில் தாமாகக் கலந்து கொண்டவர்களுக்கு ஆறு மாதக் கடுங்காவல். ஜிதேந்திரனும் மற்ற முன்னவர்களும் நிரபராதிகள் என்று தெரிவதால் அவர்களைக் கௌரவமாய் விடுதலை செய்கிறோம்" என்று சொல்லி எழுந்து சென்றார்.

கோர்ட்டில் சேர்ந்திருந்த அத்தனை ஜனங்களும் தங்களை மறந்து கற்சிலைகளாய் நின்றனர் ஒரு க்ஷணம். உடனே எல்லோருடைய குரலும் ஏககாலத்தில் "நியாயவான்" என்று ஒலித்தது. அக்பரலியின் கண்முன் தன்னை நன்றியுடன் பார்க்கும் விமலகுமாரியின் முகம் பளிச்சென்று மின்னி மறைந்தது.



எஸ்லாக்

# பட்டணம் பார்ப்பேன்

லோயாஸ்

எப்படியாவது சிதம்பரம் போய்ப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்ட நந்தனாரைப் போல் கிட்டுவும் பட்டணம் பார்க்க வேண்டும் என்னும் ஆசையால் தவியாய்த் தவித்தான்.

கிட்டு இது வரையில் பட்டணம் பார்த்ததே கிடையாது. அது சிவப்பா கறுப்பா என்றுகூட அவனுக்குத் தெரியாது. அவன் இருந்த கிராமம் சுத்தப் பட்டிக்காடு. அந்த ஊருக்கு ரயில்வே ஸ்டேஷன் கூடக் கிடையாது.




கிட்டு பட்டணத்தைப் பற்றிப் பள்ளிக்கூடப் பாடப் புத்தகத்தில்தான் படித்திருக்கிறான். நேரில் பார்க்க வேண்டும் என்னும் ஆசை அதனாலேயே அதிகமாகிவிட்டது. கிட்டுவின் மாமா பிள்ளை சுந்து பட்டணத்திலிருந்தான். கிட்டுவின் தகப்பனார் அவனைக் கோடை விடுமுறையில் பட்டணத்துக்கு அனுப்பி வைத்தார். கிட்டுவுக்கு ஆச்சரியம் தாங்க வில்லை. ஊர்வைப் ஒறுப் வண்டியைப் போல் பெரிதாக நகரும் 'டிராம்' வண்டியைப் பார்ப்பதா? வாயுவேக மனோவேகத்தில் பறக்கும் விதம் விதமான கார்களைப் பார்ப்பதா? பூமி அதிரப் போய்க் கொண்டிருக்கும் இராக்ஷஸ இராணுவ லாரிகளைப் பார்ப்பதா? இவைகளுக்கு நடுவில் 'ட்ரிண் ட்ரிண்' என்று மணி யடித்துக் கொண்டு போகும் சைக்கிள்களைப் பார்ப்பதா? மனித சஞ்சாரமே இல்லாத கிராமம் எங்கே? ஜன





சமுத்திரமாக விளங்கும் பட்டணம் எங்கே?

இதனாலெல்லாம் கிட்டுவுக்குச் சந்தோஷந்தான். இருந்தாலும் ஒரு விஷயத்தில் மட்டும் துக்கமும் அவமானமும் அவனைப் பிடுங்கித் தின்றன. சுந்து எடுத்ததற்கெல்லாம் கிட்டுவைப் 'பட்டிக் காட்டான்' என்று பரிகாசம் செய்ததுதான் காரணம். அதுவும் மிருகக் காட்சிச் சாலைக்குச் சென்றிருந்தபோது சுந்து கிட்டுவைப் பரிகாசம் செய்தது கொஞ்ச நஞ்சமல்ல. அங்கே யானையைக் கண்டதும் கிட்டுவுக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய்விட்டது. பிரமித்துப் போய் நின்றுவிட்டான். அதைப் பார்த்த சுந்து "என்னடா கிட்டு, 'பட்டிக்காட்டான் யானையைப் பார்ப்பது போல'ப் பார்க்கிறாயே!" என்று பரிகாசம் செய்து கை கொட்டிச் சிரித்தான்.

கிட்டுவுக்கு இந்த அவமானம் தாங்க முடியவில்லை. கடைசியில் கோடை விடுமுறை முடிந்து விடவே கிட்டுவும் தன் கிராமத்துக்குப் போய் விட்டான். அடுத்த வருஷம் கோடை விடுமுறைக்குச் சுந்துவை அவன் தகப்பனார் கிட்டுவின் கிராமத்துக்கு அனுப்பி வைத்தார். சுந்துவுக்குக் கிராமக் காட்சிகள் அதிசயமாய்த்தான் இருந்தன. இருந்தாலும் சுந்து அதை அதிகமாய் வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. ஆனால் பட்டண வாசத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்ளாமலிருப்பதில்லை.

சுந்துவுக்கு எப்படியாவது புத்தி கற்பிக்க வேண்டும் என்று கிட்டு தீர்மானித்தான்.

"சுந்து, ஒரு வேடிக்கை காண்பிக்கிறேன், பார்க்கிறாயா?" என்று கேட்டான் கிட்டு.

"போடா, முட்டாள்! பட்டிக் காட்டிலே என்ன பிரமாதமாக வேடிக்கை காட்டிவிடப் போகிறாய்?" என்றான் சுந்து.

"சும்மா வாயாடாதே! நான் செய்யப் போகும் வித்தையை வந்து பார்" என்றான் கிட்டு. பிறகு ஒரு ரோஜாக் கிளையை எடுத்து மண்ணில் பதியம் வைத்து நட்டான்.

"போடா, அசடு! இதுதான் பிரமாதமான வித்தையோ?" என்று கேட்டான் சுந்து.

"அவசரப்படாதே! கொஞ்சம் பொறுத்திருந்து பார்" என்றான் கிட்டு.

செழிப்பான பூமியாதலால் ரோஜாக் கிளை வெகு சீக்கிரம் வேரூன்றி இளந்துளிர் விட்டது. அதைக் கண்டவுடனேயே சுந்துவின் முகம் ஆச்சரியத்தினால் பிரகாசமடைந்தது. இரண்டு மூன்று வாரங்களுக்குப் பிறகு ரோஜா மொட்டுத் தோன்றி அழகையும் வாசனையையும் அள்ளி இறைத்துக் கொண்டு மலர்ந்தது! சுந்துவுக்கு ஒன்றுமே புரியவில்லை. இதுவரையில் கடையிலேதான் ரோஜாப்பூ விற்கும் என்று அவன் நினைத்துக் கொண்டிருந்தான். எனவே கிட்டுவைப் பார்த்து "நீ ரொம்ப கெட்டிக்காரன். கடையில் அப்பா அரிசி வாங்குவதைத்தான் நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அந்த அரிசியையும் கறிகாய்களையும் நீங்களே கிராமத்தில் பயிர் செய்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது. கிராமத்தில் நீங்கள் இவ்வளவு பாடுபட்டு உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து அனுப்புகிறீர்கள். நாங்கள் அதைச் சாப்பிட்டு விட்டு வீண் பெருமையடித்துக் கொள்கிறோம். நான் உன்னைப் பரிகாசம் செய்ததையெல்லாம் மறந்துவிடு!" என்று சுந்து கேட்டுக் கொண்டான். கிட்டுவும் அவன் மேல் கொண்ட கோபத்தை மறந்தான். அது முதல் இருவரும் ரொம்ப சிநேகமாகி விட்டனர்.

### ஒரு நூதன சிருஷ்டி



"இதென்னடா இது! அந்தக் குதிரைக்கு மட்டும் நீளவாட்டில் வரி போட்டிருக்கு? ஒரு வேளை சைவக் குதிரையா யிருக்குமோ?"

ஒரு எக்ஸ்ரே கதை

# மன்னிப்பு

வி. ஆர். ராமஸ்வாமி

ராமச்சந்திரன் தன் தகப்பனாரின் விருப்பப்படி பெண்ணைப் பார்த்துவிட்டு வந்தான். மரகதத்தின் அழகைக் கவிஞர்களால்தான் வர்ணிக்க முடியுமென்று அவன் நினைத்தான். கவிஞர்களுமென்ன அழகை வர்ணிக்கிறார்களா? அவர்கள் புஷ்பத்தையோ சந்திரனையோ பார்த்து அது பதினாறு வயது மங்கையின் முகம் போலிருந்த தென்கிறார்கள். அல்லது ஓர் அழகிய மங்கையின் முகத்தைப் பார்த்து அது ரோஜா புஷ்பம் போலோ தேயாத பூர்ண சந்திர பிம்பம் போலவோ இருக்கிறதென்பர். உபமானத்திற்கு ஓர் 'ஆனால்' போட்டு அதைவிட சில விசேஷங்களில் சிறந்ததாயும், அதிலுள்ள சில குறைகள் அற்றதாயிருப்பதாகச் சொல்லுவர். அல்லது மேலும் திறமை வாய்ந்த கவிஞர்களாயிருந்தால் அந்த அழகினால் உண்டான உணர்ச்சி மயக்கத்தை விவரித்து விட்டுப் பிரத்யேக வர்ணனைத் தொல்லையிலிருந்து தப்பித்துக் கொள்வார்கள். அழகென்பது விவரிக்க முடியாத குணம். அது ஒன்றே ஆண் பெண்களிடையே காதலை உண்டாக்க வலியதோ? பூதப் பொருள்களுக்கு இடையே ஆகர்ஷண சக்தி ஒன்று இருப்பதுபோல் ஆண் பெண் இடையே காதலும் ஓர் ரகசியமான விசுவ வேகமா? ஆனால் காதலர்களிடையே பிரிவு ஏற்பட்டால் இடைவெளியின் சதுரமடங்காக வேகம் குறையும் பௌதிக ஆகர்ஷணத்தைப் போல் குறைவதற்குப் பதிலாகப் பற்று அதிகமாகிறதே! அக்காதலே பண்படைந்தால் எல்லா ஜீவராசிகளிடமும் பெருகி அன்பாகவோ அல்லது பக்தியாகவோ மாறுமென்பதும் மெய்யா?

கலியாணம் செய்து கொள்ளப் போகிறவர்கள் ஜாதகத்தைக் காட்டி ஜோசியரிடம் மனக் கலவரத்தை யுண்டு பண்ணிக் கொள்வதில் ராமச்சந்திரனுக்கு நம்பிக்கையில்லை. அப்படி மணம் செய்து கொள்வதற்கு முன் சரீர ஆரோக்கியத்தைப் பற்றி டாக்டரிடம் காண்பித்துக் கொள்வது தான் முக்கியமென்று அவன் கருதினான். மேலும் கொஞ்ச நாளாய் அவனை மார்ச்சளி தொந்தரவு செய்துகொண்டிருந்தது. க்ஷயரோகம் இந்த மாதிரி ஆரம்பித்து ஆளைக் கொன்று விடுவதைக் கேட்டும் பார்த்துமிருந்தான். தன் நண்பன் டாக்டர் கோபாலரத்தினத்திடம் உடம்பைக் காட்டிப் பரீட்சை செய்வது நலமென்று தீர்மானித்தான்.

கோபாலரத்தினம் என்ன சமாசாரமென்று கேட்டான்.

"உன்னிடம் உடம்பைப் பரீட்சை செய்து கொள்ள வந்தேன்" என்றான்.

"ஏண்டா, கல்குண்டு மாதிரி இருக்கிறாயே! உன் உடம்புக்கு என்ன வரும்?" என்று முதுகிலடித்துக் கேட்டான்.

"அப்படியானால், கை பத்திரம். நான் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன். உடம்பு லாயக்காயிருக்கிறதா, பார். இரண்டு வாரமாய் மார்ச்சளி பிடித்துக் கொண்டு விடமாட்டேனென்கிறது" என்றான்.

"எப்பொழுது பார்த்தாலும் தூசி படிந்த சட்டப் புத்தகங்களைக் கட்டிக் கொண்டழுதால் அப்படித்தான் சளி பிடிக்கும். சரி, அந்த அதிர்ஷ்டசாலியான பெண் யார்?" என்று சிரித்துக் கொண்டு கேட்டான்.



ராமச்சந்திரன், "மிட்டாதார் ஷண்முக முதலியாரின் பெண்" என்றான்.

ராமச்சந்திரன் கோயமுத்தூரில் சர்க்கார் வக்கீல் சுப்பிரமணிய முதலியாரின் மகன். அவன் வக்கீல் பரீட்சை பாஸ் செய்து விட்டுத் தகப்பனாரிடமே வேலை பார்த்து வந்தான். அவன் சிநேகிதன் கோபாலரத்தினம் வைத்தியப் பரீட்சையில் தேறி, கோயமுத்தூரிலேயே வைத்தியத் தொழிலை நடத்தி வந்தான். அவனுடைய தகப்பனார் கலெக்டர் ஆபிசில் குமாஸ்தா வேலை பார்த்துத் தலைமைக் குமாஸ்தா பதவியிலிருந்து ரிடையர் ஆனவர். அவர் கோபாலரத்தினத்திற்கு வைத்தியப் படிப்பிற்குச் செலவழிக்கத்தான் முடிந்ததே தவிர, அவன் விரும்பியபடி எக்ஸ்ரே படமெடுக்கும் கருவி வாங்கவும், வியாதியஸ்தர்கள் தங்கி சிகிச்சை செய்து கொள்ள விடுதி அமைத்து நடத்தவும் பணம் கொடுத்து உதவ முடியவில்லை. கடன் வாங்கி எக்ஸ்ரே படமெடுக்கும் கருவி தருவித்தான். பணமுள்ள இடமாய்ப் பார்த்து மணம் செய்து கொள்ள வேண்டுமென்று நிச்சயம் செய்தான். தன்னுடைய ஜாதியைச் சேர்ந்த தன்னை வைத்தியம் செய்ய அடிக்கடி கூப்பிட்டு வந்த ஷண்முக முதலியாரின் ஒரே பெண்ணை மணம் புரிந்தால் நலமாயிருக்குமென்று மனக்கோட்டை கட்டியிருந்தான். அதைப் பற்றிப் பிரஸ்தாபிக்கத் தக்க சமயத்திற்காகக் காத்திருந்தான். தனக்கு இதயக் கோளாறு இருப்பதாயும், அது தலையெடுக்குமுன் தொழிலில் செல்வமும் கீர்த்தியும் சம்பாதித்து விட வேண்டுமென்றும், அதற்காக அதிக பணம் கொடுத்து உதவக்கூடிய சம்பந்தத்தை நாடுவதாகவும் தன் நண்பன் ராமச்சந்திரனிடம் பல தடவை அவன் சொன்னதுண்டு. ஆனால் ஷண்முக முதலியாரின் பெண் மேல் அவன் கருத்து வைத்ததைமட்டும் அவன் சொல்லவில்லை.



ராமச்சந்திரன் "மிட்டாதார் ஷண்முக முதலியாரின் பெண்" என்று சொல்லவே கோபாலரத்தினத்தின் சிரித்த முகம் திடீரென்று வாட்ட மடைந்தது.

ராமச்சந்திரனை மார்புப் பரீட்சை செய்தான். ஏதோ யோசனையி லாழ்ந்தவன், திடீரென்று ஓர் உறுதி கொண்டு தன் பரீட்சையில் ஏதோ கண்டு விட்டது போலும், அதைச் சொல்ல விரும்பாதவன் போலும் முகத்தில் ஓர் விசனக் குறியை வரவழைத்துக் கொண்டான். ராமச்சந்திரன் அவன் முகபாவத்தைக் கண்டு, "என்ன சங்கதி? ஏதாவது பிசகு இருக்கிறதா?" என்று கேட்டான்.

"இதயத்தில் விபரீதச் சத்தம் கேட்கிறது. இடது பக்கத்தில் மத்திய துவாரம் சுருங்கியிருக்கிறது!" என்றான்.

"உன்னிடத்தில்தான் எக்ஸ்ரே கருவி இருக்கிறதே, படமெடுத்து பார்!" என்றான்.

கோபாலரத்தினம் சிறிது நேரம் தயங்கி நின்றான். பிறகு 'சரி' என்று ராமச்சந்திரனைப் படமெடுக்கும் அறைக்கு அழைத்துச் சென்று படமெடுத்தான்.

"படத்திற்கு நாளைக்கு வா" என்று ராமச்சந்திரனிடம் சொல்லி அனுப்பி விட்டு, நாற்காலியில் உட்கார்ந்து சிந்தனையி லாழ்ந்தான். தெய்வத்தில் சிறிதும் நம்பிக்கை யற்ற நான்கூட மித்திரத் துரோகம் செய்யத் தயங்குவதேன் என்று அவன் தன்னையே கேட்டுக் கொண்டான். "அவனுக்கு அதிக நஷ்டமில்லை. எனக்கு அவசியம்" என்று தன்னையே சமாதானப் படுத்திக் கொண்டான்.

ராமச்சந்திரன் படத்திற்காக அடுத்த நாள் காலை வந்தான். கோபாலரத்தினம் தன்னுடைய பழைய படத்தை அவனுடைய படமென்று தந்து விட்டான். ராமச்சந்திரன் அந்தப் படத்தை எடுத்துக் கொண்டு நண்பன் சொன்னபடி ஓர் பிரபல டாக்டரிடம் காண்பித்தான். அவர் அவனைப் பரீட்சை செய்துவிட்டு, "தேகத்தைப் பரீட்சை செய்ததில் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் படம் இதயத்தில் பிறவிக்கோளாறு இருப்பதைக் காண்பிக்கிறது. கஷ்டமான வேலை செய்யக் கூடாது" என்று சொன்னார். வைத்திய முறைகள் சிக்கல் ஆக ஆக ஸ்பெஷலிஸ்ட்டுகளிடத்தில் மூட நம்பிக்கை அதிகமானதற்கு இது ஒரு திருஷ்டாந்தம். ராமச்சந்திரன் தான் பார்த்த பெண்ணின் வாழ்க்கையைக் கெடுக்க விரும்பாமல் தகப்பனாருக்குத் தான் கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லையென்றும், ஊரைவிட சென்னையில் தொழிலில் அபிவிருத்தியடைய அதிக வசதி யிருக்கிற

தென்றும் தான் சென்னையிலேயே தொழில் நடத்தத் தீர்மானித்து விட்டதாகவும், அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதாகவும் எழுதிவிட்டான். தகப்பனார் மகனின் துணிச்சலைக் கெடுக்கக் கூடாதென்று அவனை இஷ்டப்படியே போக விட்டு விட்டார். சில புத்திமதிகளைக் கடித மூலம் புகட்டினார்.

ஒரு மாதம் கழித்து மரகதத்திற்கும் டாக்டர் கோபாலரத்தினத்திற்கும் கல்யாணம் நடந்ததாகப் பத்திரிகையில் விளம்பரத்துடன் தம்பதிகளின் படம் அச்சிட்டிருப்பதை ராமச்சந்திரன் பார்த்தான். முதலில் சிறிது ஆச்சரியமும், பிறகு சிறிது சிரிப்பும், கடைசியில் ஓரளவு மனச் சாந்தியையும் முறையே அடைந்தான்.

அதிர்ஷ்ட வசத்தால் அவன் எதிர்பார்த்தபடியே சென்னையில் ஐந்து வருஷங்களில் அதிசயிக்கத் தக்க பெரும் புகழும் அடைந்தான். கிரிமினல் வழக்குகளில் எதிர் தரப்பில் வாதிக்கும் வக்கீல் முதலில் பேசாமல் பிழைகள் செய்யவிட்டுத் திடீரென்று கொக்கு போல் பாய்ந்து அவற்றை எடுத்துக் காட்டி நீதிபதிக்கு அவர் பேரில் அவநம்பிக்கையை உண்டு பண்ணி வழக்கில் வெற்றி யடைந்து வந்தான். சிவில் வழக்குகளில் தன் கட்சிக்காரர்கள் சொன்ன தெல்லாவற்றிற்கும் ஆதாரங்களைத் தேடித் திரிந்து குழப்பாமல் நீதிபதியின் மனதை முதலில் அவர் போன போக்கில் விட்டு, பிறகு மீன் பிடிப்பவன்போல் தன் பக்கம் இழுத்துக் கொள்வான். அவன் தகப்பனார் ஹைகோர்ட்டில் தன்னுடைய அப்பீல்களை யெல்லாம் அவனையே நடத்தச் சொன்னார்.

ஐந்து வருஷமானதும் தன் ஷஷ்டியப்தி பூர்த்தி நடத்தப் போவதாகக்



"ஏ, வைக்கல்! போடறதாப்பா?"
"இல்லிங்க: நிழலுக்காகத் தூக்கிட்டுப் போறேன். தலையில் ஒண்ணு மில்லேன்னு வெய்யிலில் ரொம்பக் கஷ்டமாய் இருக்கு."

கடிதம் வரவே ராமச்சந்திரன் மறுபடியும் கோயமுத்தூருக்கு வந்தான். அந்த வைபவம் சிறப்பாக நடந்தது. ராமச்சந்திரன் தகப்பனாரை "கோபால ரத்தினம் ஏன் வரவில்லை?" என்று விசாரித்தான். அவன் தகப்பனார் "அவனுக்கு உடம்பு சரியாயில்லை" என்றார். ராமச்சந்திரன் அவனைப் பார்க்க அவன் வீட்டிற்குச் சென்றான்.

வீட்டு வாசலில் மரகதத்தைப் பார்த்தான். முன் பார்த்த மரகதமா இவள், அல்லது அவளுடைய நிழலா? உள்ளே சென்று கோபாலரத்தினத்தையும் பார்த்தான். காரணம் விளங்கிற்று. மனச்சோர்வே உருவெடுத்தாற்போல் படுத்திருந்தான். ராமச்சந்திரன் சற்று நேரம் அவனுடன் பேசி, தைரியம் சொன்னான். தன்னுடைய மாமா ஒருவர் 'தீராத வியாதி' என்று பெரிய சர்ஜனால் கைவிடப்பட்டு, பிறகு மற்றொரு சர்ஜனால் ஆபரேஷன் செய்யப்பட்டுச் சௌக்யமாயிருப்பதைச் சொன்னான். பிறகு வீட்டுக்குத் திரும்பினான்.

அவன் கண்டது அவனுக்கு வாழ்க்கையில் வெறுப்பை உண்டாக்கிற்று. தன் துக்கத்தை அவனால் பொறுக்க முடியும், மற்றவர்கள் துக்கப்படுவதை அவனால் சகிக்க முடியவில்லை. இந்தச் சம்பவம் அவனுக்குத் தன் எக்ஸ்ரே படத்தைப் பார்த்துக் கோபாலரத்தினம் சொன்னதை நினைவூட்டியது. "எனக்கு இம்மாதிரி வாழ்வு தான் காத்திருக்கிறதோ? இப்பொழுது சண்டை மும்முரமாய் நடக்கிறது. வயிற்றுப் பிழைப்பிற்கோ, ஆடம்பர வாழ்விற்காகவோ, அற்ப சுகங்களின் மேலுள்ள ஆசையாலோ படித்தவர்களெல்லாம் அதில் சேர்கிறார்கள். கோபாலரத்தினத்தைப் போல் படுக்கையில் படுத்துச் சாவதைவிட, ஆகாய விமானத்திலிருந்து விழுந்தோ, வெடி குண்டால் சிதறுண்டோ ஒரு கணத்தில் சாவது மேலல்லவா?"

சென்னை சென்று விமானப் படையில் சேர்ந்து விட்டு "பல பேர் போல் நானும் தேசப் பாதுகாப்பில் பங்கெடுத்துக் கொள்ள விரும்பி விமானப் படையில் சேர்ந்து விட்டேன். இந்தச் செய்தியைக் கேட்டுச் சந்தோஷப் படுவீர்களென்று நம்புகிறேன். என்னிடமிருந்து நீங்கள் தவறாமல் கடிதங்கள் எதிர்பார்க்கலாம்" என்று தகப்பனாருக்குக் கடிதமெழுதினான்.

* * *

ஒரு வருஷம் சென்றது. ராமச்சந்திரன் பல இடங்களில் விமானப்படை சண்டைகளில் பங்கெடுத்துக் கடைசியில் இந்தியாவில் ஓர் ஆகாய விமான நிலையத்தில்

இறங்கும் பொழுது மரங்களில் மோதி அவன் விமானம் நாசமடைந்தது. ராமச்சந்திரன் ஒருவன்தான் உயிருடன் தப்பினான். மண்டையடி பட்டு ராணுவ ஆஸ்பத்திரியில் ஸ்மரணையற்றுக் கிடந்தான். சர்ஜன் ஆச்சரியகரமான ரணச் சிகிச்சை செய்து அவன் மண்டை எலும்பை யெடுத்துக் காயத்தை ஆற்றினார். ராமச்சந்திரன் அங்கு கண்டு கேட்ட புதிய சிகிச்சை முறைகள் அவனுக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

கடவுளின் லீலைதான் என்ன! சுடுகாட்டில்தான் பச்சிலை முளைக்க வேண்டுமா? எல்லாவற்றையும்விட அவன் காயம் சரியாய் ஆறிவிட்டது என்று படம் எடுத்துப் பார்க்க எக்ஸ்ரே அறையில் காக்க வைத்திருக்கையில் அங்கே கோபால ரத்தினத்தின் ஆளைப் பார்த்தது ஆச்சரியத்தைத் தந்தது. அவனை விசாரித்ததில் டாக்டர் கோபால ரத்தினம் வேலையை விட்டு விட்டதால் தான் ராணுவத்தில் சேர்ந்து விட்டதாகச் சொன்னான். ராமச்சந்திரன் தன்னைப் பார்க்க வந்த சர்ஜனை இருதய வியாதிகளை ரணச்சிகிச்சை செய்து சொஸ்தப்படுத்த முடியுமா வென்று கேட்டான்.

அவர், "முடியும்; எதற்காகக் கேட்கிறாய்?" என்றார்.

ராமச்சந்திரன் தன் நண்பனைப் பற்றிச் சொன்னான்.

சர்ஜன், "நீங்கள் டேராடூனில் ஒரு வியன்னா சர்ஜன் விரோதி தேசக் கைதியாயிருக்கிறார். அவரை உங்கள் சர்க்கார் கஷ்டமான ரணச் சிகிச்சைகள் செய்ய அனுமதி தருவதாகக் கேள்விப்படுகிறேன். போய்ப் பாருங்கள்" என்றார்.

ராமச்சந்திரனுக்கு ஒரு மாதம் லீவ் தந்தார்கள். அவன் நேராகக் கோயமுத்தூருக்கு வந்தான். கோபாலரத்தினத்தின் வீட்டிற்குச் சென்று அவனுடன் வெகு நேரம் மன்றாடி மனைவியை அவன் தகப்பனார் வீட்டில் விடச்செய்து டேராடூனுக்கு அழைத்துச் சென்றான்.

போகும் வழியில் கோபாலரத்தினம் தன் அக்கிரமத்தை ராமச்சந்திரனுக்குத் தெரிவித்து, "நான் பிழைப்பது நிச்சயமில்லை. உலகத்தை விட்டுப் போகுமுன் நடந்ததை உனக்குச் சொன்னால் நல்லதென்று சொல்லி விட்டேன். உனக்கு வீண் மனக் கவலை தந்ததற்கு மன்னிக்க வேண்டும்" என்று சொல்லி அழுதான்.

"நீ சாகப் போவதில்லை. உனக்கு ஆபரேஷனால் உடம்பு சரியாய் விடுமென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன். என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் ஒன்றும் மனதில் வைத்துக் கொள்ளவில்லை" என்று ராமச்சந்திரன் சமாதானம் சொன்னான்.

டேராடூனில் கோபாலரத்தினத்திற்கு இருதய ரணச்சிகிச்சை நடந்தது. அறைக்கு வெளியில் ராமச்சந்திரன் கவலையுடன் காத்திருந்தான். வியன்னா சர்ஜன் சிந்து முகவாட்டத்துடன் வெளியே வந்தார்.

ராமச்சந்திரன் அதைக் கண்டு கவலையுடன், "ஆபரேஷன் வெற்றியா?" என்று கேட்டான்.

சர்ஜன், "ஆபரேஷன் செய்யும் பொழுது அதிக ரத்தம் சிந்தி விட்டது. உடனே ரத்தம் நாடியில் ஏற்றவேண்டும். பரீட்சை செய்து கொடுக்க நேரமில்லை. அந்த மாதிரி ரத்தமுள்ளவர் இங்கில்லை" என்றார்.

ராமச்சந்திரன், "என்னுடைய ரத்தம் எல்லாருக்கும் கொடுக்கலாமென்று ராணுவ டாக்டர் சொல்லியிருக்கிறார். நான் ரத்தம் தருகிறேன்" என்றான்.

அப்படியே அவனுடைய ரத்தம் கொடுக்கப் பெற்றுக் கோபாலரத்தினம் பிழைத்தான். வியன்னா சர்ஜன், "உனது நண்பன் பூரண தேகபல மடைவான்" என்று உறுதி கூறினார். ராமச்சந்திரனுக்கு டேராடூனிலிருக்கும் பொழுதே கம்பெனியில் சேர உத்தரவு வந்தது. அவன் மறுபடியும் தன் படையை யடைந்தான்.

* * *

ஆறு மாதத்திற்குப் பின் கோபாலரத்தினம் கோயமுத்தூரில் நண்பன் ராமச்சந்திரன் விமானப் போரில் மரணமடைந்த செய்தியைப் பத்திரிகையில் படித்தான். மனைவி விம்மி விம்மி அழுதாள்.

"உலகத்தில் எல்லோரும் பிரயாணிகள். ஒருவன் முன்னால் போகிறான். மற்றொருவன் சற்றுப் பின்னால் போகிறான். அவன் புகைப் படத்தைப் பெரிது செய்து இங்கே மாட்டட்டுமா?" என்றான்.

மரகதம் "வேண்டாம்!" என்றாள்.



"கரடி பார்க்கக் காணோ ஸார்! என்ன ஸார் இது? இவ்வளவு பேர் நிற்கிறீர்கள்; ஒருவராவது காசு கொடுத்துப் பார்க்கக் காணோமே!"

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 142. ஓட்டப் போவது கொம்போ, அம்போ!

கரனது சேனைத் தலைவனான திரிசிரா பெரும் படைகளோடு போருக்கு வந்ததில் குறைவில்லை.

ஆனால் ராமனுடைய அம்புகள் வந்து திரிசிராவின் காலைத் துணித்ததையும், ளைத் துணித்ததையும், கடைசியில் லையைத் துணித்ததையும் படையி ள்ளவர்கள் பார்த்தார்கள். உயிர் ன வீரர்கள் மார்பில் தைத்த அம்புக ளாடு அப்படியே நின்ற பயங்கரமான லத்தை வேறு பார்த்தார்கள். ந்தக் காட்சிகள் எல்லாம் மிஞ்சி நின்ற ர்களைக் கதி கலங்கச் செய்து விட்டன. ட்டம் பிடித்தார்கள் அவர்கள்.

தூஷணன் அவர்களைத் தடுத்துக் கொஞ்சம் நிற்கச் செய்து பேசுகிறான்:

"இந்த ராமன் மனிதன்தானே? மனிர்களுக்கு வீரச் செயல் என்பதும் ஒன் ண்டா? பயப்பட வேண்டாம் நீங்கள். ன் மனசில் உள்ளதை உங்களுக்குச் சால்ல விரும்புகிறேன். கொஞ்சம் களுங்கள்."

அனையர் ஆகிய
அரக்கரை, 'ஆண்தொழிற்(கு)
அமைந்த
வினையம் நீங்கிய
மனித்தரை வெருவன்மின்'
என்று,—
'நினையும் நான் உமக்(கு.)
உரைப்பதொன் றுண்(டு)' என
நின்றே,
துனையும் வாம்பரித்
தேரினன் தூடணன்
சொன்னான்.

[அனையர் ஆகிய அரக்கரை: மேலே சான்னபடி பயந்து ஓடிக் கொண்டிருக்கிற ரக்கரைப் பார்த்து: ஆண் தொழிற்கு மைந்த வினையம் நீங்கிய: போர்த் தொழி க்கான பயிற்சி கொஞ்சமும் இல்லாத: னித்தரை வெருவன்மின்: ஒன்றுக்கும் உத ாத இந்த மனிதருக்கு ஏன் பயப்பட வேண் ம்: என்று: என்று சொல்லி அரக்கரை றுத்திய பிறகு: துனையும் வாம்பரித் தேரினன் தூடணன்: வேகமாய்த் தாவிச் செல்லும் குதிரை பூட்டிய தேரில் நின்ற வண்ணமாய்த் தூஷணன்.]

அரக்கர் படையைச் சேர்ந்த ஆட்கள் பயந்த வண்ணமாய், ஆயிரக் கணக்காய் நிற்கிறார்கள்.

அவர்களைப் பார்த்துத் தேரின்மேல் நின்று கொண்டு பேசுகிறான் தூஷணன்.

"வீரருக்கு வசை என்பதாக ஒன்றும் கிடையாது. ஆனாலும் பயம் என்பது மனசில் இருக்கிறது என்ற உணர்ச்சியோடு வாழ்ந்தால் அதுதான் வசை அவர்களுக்கு. அப்பேர்ப்பட்ட கேவலமான மக்களைக் கண்டு யார்தான் அஞ்சுவார்கள்!"

'வச்சை யாம்எனும்
பயம்மனத்(து) உண்டெனை
வாழும்
கொச்சை மாந்தரைக்,
கோல்வளை மகளிருங்
கூசார்;
நிச்ச யம்எனும்
கவசம்தான் நிலைநிற்ப
தன்றி,
அச்சம் என்னும்அ(து)
ஆருயிர்க்(கு) உறுதுணை
ஆமோ?'

[வச்சையாம் எனும் பயம்: வசை என்று சொல்ல வேண்டிய பயம்; கொச்சை மாந்தரை: கேவலமான மக்களை; கோல்வளை மகளிரும் கூசார்: தெளிவு வளையல் அணிந்துள்ள பெண்கள் கூடப் பயப்பட மாட்டார்கள்; நிச்சயம் எனும் கவசம்தான்: தோளும், வேலும் இருக்கும்போது எதிரி மானாது என்ன செய்வான் என்று என்றும் மன உறுதியாகிய கவசம்தான்: நிலை நிற்ப தன்றி: நிலையாக நின்று நம்மைப் பாது காக்குமே ஒழிய: அச்சம் என்னும் அது: இதோ பயப்படுகிறீர்களே உயிர் போய் விடுமோ என்று எண்ணி,- இந்த அச்சமானது: ஆருயிர்க்கு உறுதுணை ஆமோ: உங்களுடைய உயிருக்குப் பாதுகாப்பாக இருக்கும் என்று சொல்ல முடியுமா?

குறிப்பு:—பயம் என்று ஒன்று இருப்பதாக எண்ணினாலே கேவலம். அப்படியானால் பயம் கொண்டு ஓடுகிறதென்றால் அதைப்பற்றிச் சொல்லவா வேண்டும்?

"கோள்வளை மகளிரும்" என்று சொல்வதில் "கோள்வளை" என்ற அடை இகழ்ச்சி பாவத்தை அழகாய் எடுத்துக் காட்டுகிறது.]

மேலும் பேசுகிறான் ராவணன்.

"ஏதோ அபாரமான வீரம் படைத்தவன் இந்திரன். அவனோடு போர் செய்தோம். நித்திய ஜீவியரான பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய தேவர்களோடும் போர் செய்தோம். அந்தப் போர்களில் அரக்கன் என்பவன் எவனாவது முதுகு காட்டி ஓடியவன் உண்டா?—சொல்லுங்கள்."

'பூஅரா வேல்ப்
புரந்தர னோடுதான்,
பொன் று
மூவரோடுதான்,
முன்னின்று மூட்டிய
முனை யில்
ஏவர் ஓடினர்
இராக்கதர்?- நுமக்கிடைந்(து)
ஓ டும்
தேவ ரோடுகற்(று)
அறிந்துளி ராம்எனத்
திகைத் தீர்?

[பூ அராவு வேல்: பூவேலை செய்து ராவிய வேலை ஏந்திய: புரந்தரனோடுதான்: தேவேந்திரனோடுதான்: பொன்று மூவரோடுதான்: இறப்பு என்பதில்லாத மும்மூர்த்திகளோடு



ரயில் வேலை நிறுத்தம் நேர்ந்தால், டிரங்குப் பெட்டிகளுக்கு இம்மாதிரி புதிய உபயோகங்கள் ஏற்படலாம்.

தான், (தேவர்களுக்கொப்பான சக்தி வாய்ந்த பகைவரோடு): முன்னின்று மூட்டிய முனையில்: எதிர்த்து நின்று செய்த போரில்: ஏவர் ஓடினர் இராக்கதர்: இராக்ஷஸர் யாராவது ஓடியதுண்டா?: நுமக்கு இடைந்து ஓடும் உங்களுக்குத் தோற்று ஓடின: தேவரோடு கற்று அறிந்துளிராம் என: தேவரிடம் சம்பளம் கொடுத்துக் கற்று அறிந்து கொண்டீர்கள் என்று சொல்லும்படியாக திகைத்தீர்: யுத்தம் செய்ய வேண்டும் என்பதை மறந்துபோய் ஓடத் தலைப்பட்டீர்களே!]

"வீரர்களே, உங்களுக்குக் கண் வீரம் நிறைந்ததாய்ச் சிவந்திருக்க வேண்டும். அந்தச் சிவந்த நிறமெல்லாம் இங்கு ஓடி வெளுப்பாய்ப் போய்விட்டதே, கண்ணிலே அவ்வளவு பயம் இருக்கிறது!

"மேலும், வறண்ட காட்டுக்குள் அப்படியும் இப்படியும் நுழைந்து ஓடப் பார்க்கிறீர்கள். காட்டிலுள்ள கள்ளிகள் உங்கள் முதுகை எல்லாம் குத்திப் பாய்ந்திருக்கின்றன. அந்தக் கள்ளிகளை வீட்டிற்குக் கொண்டு போய்க் காட்டப் போகிறீர்கள், நாயகிகளுக்கு?"

'செம்பு காட்டிய
கண் இணை பால்எனத்
தெளிந் தீர்;
வெம்பு காட்டிடை
நுழைதொறும் வெரிந்உறப்
பாய்ந் த
கொம்பு காட்டுதி
ரோ, தட மார்பிடைக்
குளிர்ந் த
அம்பு காட்டுதி
ரோ, குல மங்கையர்க்(கு)
அம் மா!

[செம்பு காட்டிய கண் இணை: செந்நிறம் கொண்ட உங்கள் கண்கள்: பால் எனத் தெளிந்தீர்: பயத்தினால் பால்போல் வெளுக்கலாயிற்று: வெம்பு காட்டிடை நுழைதொறும்: வறண்ட பாலைவனத்துள் நுழைந்து தப்பி ஓடும்போது: வெரிந் உறப் பாய்ந்த: முதுகில் அழுந்தமாகப் பாய்ந்த: கொம்பு காட்டுதிரோ: காய்ந்த கள்ளிகளைக் காட்டுவீரோ; அப்படி அல்லாமல்—தடமார்பிடை குளிர்ந்த: விரிந்த மார்புக்குள் பாய்ந்த: அம்பு காட்டுதிரோ: அம்பை உங்கள் வீரம் விளங்கக் காட்டுவீரோ; குல மங்கையர்க்கு: உங்கள் குலக் காதலிகளுக்கு: அம்மா: அடடா, என்ன தான் செய்யப் போகிறீர்கள்?]

வீரப் பேச்சு இந்த வேகத்தில் போய்க் கொண்டிருக்கிறது. வீர வாக்கு இன்னது என்பது கம்பரது தமிழில் தெரிகிறது.

# கிடைப்பது சொற்பமே யாகும்போது

# —சிறந்தவைகளையே பார்த்து வாங்குங்கள்!

இந்தியாவில் எல்லா மில்லுகளையும் போலவே நாங்களும், சர்க்கார் கட்டுப்பாடுகளையனுசரித்து முக்கியாவசியமான துணி ரகங்கள் மட்டுமே தயாரித்து வருகிறோம். எனினும், எங்களது தற்போழுதைய டிரில்கள், ட்வில்கள், கோட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், லாங்கிலாத்து — எல்லாம், பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ச் சரக்குகளின் நிரந்தர எடுத்துக்காட்டுகளாயிருந்து வந்துள்ள அதே உழைப்புத் தன்மையும், நிறை நேர்மையும் வாய்ந்தவைகள்தான்.

உலகமெங்குமே தலைவிரித்தாடும் இந்த ஜவுளிப் பஞ்சத்தின்போது, கிடைக்கும் சொற்பத் துணிமணிகளைக் கொண்டு இன்னும் பல காலம் சமாளித்து வருவதை விடுத்து நம்மனைவருக்கும் வேறு கதியேயில்லை. இப் பஞ்சகாலத்தில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதி கிடைக்க, நீடு காணும் வர்த்தக முத்திரைகளை அறிகுறியாகக் கொண்ட பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ச் சரக்குகளையே, சாத்தியமாகும்போதெல்லாம் மறவாமல் வாங்குங்கள்.



### யுத்தகாலம்

சென்ற ஆறு ஆண்டுகளில் நாங்கள் சர்க்காருக்கு 43,20,00,000 கஜம் துணி சப்ளை செய்திருக்கிறோம். அதாவது, யுத்த காரியங்களுக்காக அளித்த எங்களது துணி உற்பத்தி வருடத்தில் 41,000 மைலெனக் காட்டுகிறது. எட்டு மாதம் கூடுகையிலுள்ள உற்பத்தியானது நம் பூமியை ஒரு தரம் சுற்றிக் கட்டப் போதுமான நீளம் வருமென்றால் பாருங்களேன்!



பக்கிங்ஹாம் & கர்னடிக் மில்ஸ்தான் 1900-ல் இந்தியாவில் காக்கித் துணி செய்வதை முதன் முதலாக ஆரம்பித்தவர்கள், யுத்தகாலத்தில் அவர்கள் எப்போதும், ஏராள பொறுப்பை மேற்கொண்டுதான் செய்கிறார்கள்.

### சமாதான காலம்

எங்களது இன்றைய உற்பத்தியானது மாதம் 60,00,000 கஜங்களுக்கு மேலாகவே வரும். ஆனால் ரயில் போக்குவரவுக் கஷ்டங்களால், சில ஊர் ஸ்தலங்களுக்கு எங்களால் சரக்குகள் தாராளமாக விநியோகிக்க முடியவில்லை. இரசாயனப் பொருட்களுக்கும் சாயங்களுக்கும் ஏற்பட்டுள்ள பஞ்சம் காரணமாக, யுத்தத்திற்கு முன் ஜனங்களின் மனதைக் கொள்ளை கொண்டிருந்த அனேக ரகங்களும், மற்றும் பற்பல கலர் டிஸைன்களும் தயாரிப்பது சாத்தியமாகாமலிருக்கிறது. ஆனால், இந்தத் தடை தாற்காலிகமென்றே நம்புகிறோம்.

இதற்கிடையே, நாங்கள் ஏராளமாகத் தயாரிக்கும் அவசிய துணி நிறுவைகள் உங்கள் உபயோகத் திற்குகந்தவைதான் - நீடித்துழைக்கவும் செய்யும்.

சர்க்கார் கட்டுப்பாடு அமுலுக்கு வருவதற்கு நெடுநாளையோ முன்பு, நாங்கள் விலைகளை மலிவாக்கியே யிருந்தோம். எங்கள் சரக்குகள் கட்டுப்பாடு விலைகளில், உங்கள் பணத்திற்குச் சிறந்த பெறுமதியாகவே இன்னும் பெரும்பாலு மிருந்து வருகின்றன.

## தி பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி, லிட்.,

## சென்னை

மானேஜிங் ஏஜண்டுகள்: **பின்னி & கோ., (சென்னை) லிட்.**

# யார்?

விந்தன்



கொடுத்து வைக்காம? உங்க வீட்டுக்கு ஆளைக் கூட அனுப்பி வைத்தோம். நீ ஊரிலேயே இல்லையாமே! — ஹூம்...... என்னமோ 'அந்த மனுஷன்'தான் இந்தக் கதிக்கு ஆளாக்கி விட்டுட்டுப் 'போறேன்'னு போய்விட்டாரே, இவனாவது என்னை எடுத்துப் போட்டு விட்டுப் போவான்னு பார்த்தேன்; பாழும் தெய்வம் மோசம் பண்ணிடுத்து!" என்று தன் புடவை மேலாக்கினால் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டாள்.

தர்ம சங்கடமாகப் போய் விட்டது எனக்கு. எழுந்து நின்றேன். எதிர்த்த அறையிலிருந்த விநாயகத்தின் தாய் என்னைக் கண்டதும், 'கோ' வென்று கதற ஆரம்பித்து விட்டாள். அவள் ஆணாயிருந்திருந்தாலும், "அட! அது கிடக்கு, விட்டுத் தள்ளப்பா! இன்னொரு பெண்ணை 'ஜம்'மென்று கல்யாணம் செய்து கொண்டால் போச்சு!" என்று ஊர் வழக்கத்தை யொட்டி உற்சாகப்படுத்தி யிருப்பேன். என்னுடைய துரதிர்ஷ்டம் அவள் பெண்ணாயிருந்து விட்டாள்! என்ன செய்வது? மனதைத் திடப்படுத்திக் கொண்டு, "அழாதே அம்மா, அழாதே!" என்றேன்.

"ஐயோ! மஞ்சள் குங்குமத்தோடு போய்ச் சேரலாமென்று இருந்தேனே! என்னுடைய தலையெழுத்து இப்படியா ஆகவேண்டும்? இந்தப் பாவிக்குத் தலைவலி, காய்ச்சல் என்றால் அவர் என்ன தவியாய்த் தவிப்பார்! அங்கேயும் இங்கேயுமாய்க் குட்டி போட்ட பூனைபோல் ஓடி அலைவாரே! இனிமேல் அப்படி யார் எனக்காக அலையப் போகிறார்கள்?" என்றாள் அவள் விம்மலுக்கும் விக்கலுக்கும் இடையே.

"என்ன இருந்தாலும் அந்தப் பாழும் தெய்வம் என்னை இப்படி அனாதையாக்கி விட்டிருக்க வேண்டாம்! என்னமோ, இத்தனை காலும் அந்தப் பாவி மனுஷர் என்னைப் பாடாய்ப் படுத்தி வைக்கும்போதெல்லாம், 'அண்ணா இருக்கிறார்!' என்று கொஞ்சம் தைரியமா யிருந்தேன். இப்போது அதுவும் போய் விட்டது!" என்றாள் விநாயகத்தின் அத்தை.

எனக்கு என்னமோ மாதிரி யிருந்தது. "மனிதன், சுயநலத்தை உடம்போடு ஒட்டிய தென்று நினைத்துக்கொண்டு, அதை அறவே ஒழித்து விட வேண்டுமென்று மண்டையை உடைத்துக் கொள்ளுகிறானே, என்ன மடத்தனம்!" என்று எண்ணி வியந்தேன்.

ஆனாலும், பிறருடைய சுயநலத்தைத் தான் மனிதன் ஒழித்துவிடப் பார்க்கிறானே தவிர, தன்னுடைய சுயநலத்தை ஒழித்து விட முயல்வதில்லை யல்லவா?

நானும் பார்க்கிறேன்; ஒவ்வொருவருடைய உயிரோடும் அல்லவா அந்தப் பாழாய்ப் போன சுயநலம் ஒட்டிக் கொண்டிருக்கிறது! உடன் பிறந்த வியாதி மடியும்போது விலகுவது போல்தான் இந்தச் சுயநலமும் விலகுமோ!

வேடிக்கையைப் பாருங்கள்; சஹஸ்ரநாமமோ, "கேட்டபோதெல்லாம் இனி யார் கடன் கொடுக்கப் போகிறார்கள்!" என்று வருந்துகிறார்.

விநாயகமோ, "வக்கீல் பரீட்சைக்குப் படிக்க முடியாமற் போய் விட்டதே!" என்று வருந்துகிறான்.

அம்மாவோ, "என்னை எடுத்துப் போடாமல் எனக்கு முன்னால் போய்விட்டானே!" என்று வருந்துகிறாள்.

மனைவியோ, "என்னுடைய உடம்புக்கு ஏதாவது வந்தால் இனிமேல் கவனிப்பதற்கு யாரும் இல்லையே!" என்று வருந்துகிறாள்.

தங்கையோ, "'அண்ணா இருக்கிறார்!' என்று தைரியமாய் இருப்பதற்கு இல்லையே!" என்று வருந்துகிறாள்.

எல்லாம் அவரவர்களுடைய சொந்த நலனைப் பற்றி; அவனால் தாங்கள் அடைந்த லாப நஷ்டத்தைப் பற்றி!

அப்படியானால், ஆத்மசாந்தி யடைந்த அந்த அப்பாவி ஆத்மாவுக்காக ......?

வருந்துவார் யார்?

# வருந்துவார்

ஒரு மாதத்திற்குப் பிறகு, அன்றுதான் ஊரிலிருந்து திரும்பி வந்தேன். எனது நண்பன் ஆத்மநாதன் அமரனாகி விட்டான் என்ற செய்தி என் காதில் விழுந்தது. காலனைக் காலால் உதைத்த சிவனை வழிபடுவதில், சாக்ஷாத் மார்க்கண்டேயனைக் கூடத் தூக்கியடித்த அவனுக்கா இந்த கதி!

"குழந்தையைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு பாலூட்டும் தாய், ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்கு மாற்றும் போது அது வீறிட்டு அலறுகிறது. மீண்டும் தனக்குப் பாலூட்டுவதற்காகத் தான் அன்னை அவ்வாறு செய்கிறாள் என்பதை அது அறிவதில்லை! — அந்தக் குழந்தையின் அறியாமையைப் போன்றது தான் மனிதன் மரணத்தைக் கண்டு மனம் பதைப்பதும்" என்கிறார் கவியரசர் டாகூர். ஆனாலும் அவனை பறித்த இதயம் சும்மாவிருக்கிறதா? என்னவெல்லாமோ எண்ணி எண்ணி ஏங்கிற்று.

என்னுடைய நிலையே இப்படியென்றால், அவனுடைய சுகதுக்கங்களில் என்னைவிட விசேஷமாகப் பங்கெடுத்துக் கொண்ட மனைவியும் மக்களும் எந்த நிலையில் இருப்பார்கள்?— அவர்களைப் போய்ப் பார்த்து விட்டு வரலாமென்று கிளம்பினேன்.

*

வழியில் சஹஸ்ரநாமம் வந்து கொண்டிருந்தார். ஆத்மநாதனின் அத்தியந்த நண்பர் அவர். என்னைக் கண்டதும், "சமாசாரம் தெரியுமோ?" என்று ஆரம்பித்தார்.

"தெரியும்; ஆத்மநாதன்............"

"ஆமாம்; என்ன அநியாயம் பாருங்கள்! இன்னும் அவர் மறைந்துவிட்ட மாதிரியே எனக்குத் தோன்றவில்லை. அடடா, என்ன தங்கமான குணம்! கேட்கும்போதெல்லாம் நூறும் இருநூறுமாகக் கொடுத்துக் கொண்டே இருப்பார். இனிமேல் அவரைப் போல் எனக்கு யார் உதவி செய்யப் போகிறார்கள்?......"

"ஹூம்; என்ன செய்யலாம்? நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்!" என்று சொல்லி விட்டு, நான் மேலே நடையைக் கட்டினேன்.

ஆத்மநாதனின் வீடும் நெருங்கி விட்டது. முன்னிருந்த களை, இப்போது அந்த வீட்டிற்கு இல்லை. பட்டப் பகலிலேயே இருளடைந்து கிடந்தது. உள்ளே நுழைந்தேன். கலகலப்பே யில்லை; வெறிச்சென்றிருந்தது. அவருடைய மூத்த குமாரனான விநாயகம் மட்டும் சோகமே உருவாய்க் கூடத்தில் உட்கார்ந்திருந்தான்.

என்னைக் கண்டதும் அவன் கண்களில் துளித்த நீரைக் கைக்குட்டையால் துடைத்து விட்டுக் கொண்டே, "வாருங்கள்!" என்றான். அவனுடைய கையை அனுதாபத்தோடு பற்றி, "அழாதே, விநாயகம்! அவன் விருப்பம் அப்படி யிருந்தால் அதற்கு நாம் என்ன செய்யலாம்?" என்று அவனைத் தேற்றினேன்.

இருந்தாற்போலிருந்து அவன் முக மலர்ச்சியுடன், "ஒரு விஷயம், கேளுங்கள்! என்னிடம் அவர் எதைச் சொன்னாலும் நான் மற்றவர்களைப்போல் லேசில் ஒப்புக் கொள்ளுவதே இல்லை. இல்லாத விதண்டாவாதமெல்லாம் செய்வேன். அவர் கொஞ்சமாவது கோபித்துக் கொள்வார் என்கிறீர்களா? கிடையவே கிடையாது. குலுங்கக் குலுங்கச் சிரித்துக் கொண்டே, 'அடேய், விநாயகம்! உனக்கு வாதம் செய்வதில் நல்ல திறமை யிருக்கிறது; நீ வக்கீல் பரீட்சைக்குத்தான் படிக்க வேண்டும்!' என்பார். நானும் இந்த பி. ஏ. பரீட்சை முடிந்ததும் அப்படியே படிக்கலாம் என்று எண்ணி யிருந்தேன். என்னுடைய எண்ணத்தில் மண்ணைப் போட்டுவிட்டு அவர் போயே போய் விட்டார்!......"

இந்தச் சமயத்தில் அங்கே வந்த விநாயகத்தின் பாட்டி, "இத்தனை நாளா நீ எங்கேடா அப்பா போயிட்டே? அத்தனை ஸ்நேகமா யிருந்து கடைசியா ஒரு முறை அவன் முகத்தைக்கூடப் பார்ப்பதற்குக்






**SOLE AGENTS FOR ARYAN TOOTH BRUSH**

விலை, மற்றுமுள்ள விவரங்களுக்கு எழுதுக:

கலபி ஸ்டோர்ஸ், ஸ்வதேசி மார்க்கெட், பம்பாய் 2

---

**SUNSHINE**




ஸன்ஷைன்

# கிளாக்ஸோ

## குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது

இந்தியாவில் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

எச். ஜே. பாண்டர் அண்ட் கோ., லிட்.

பம்பாய் - கல்கத்தா - மதராஸ் - லாகூர்




குழந்தைகள் பராமரிப்பைப் பற்றிய சிறிய புத்தகம் 4 அணாவுக்கு ஸ்டாம்புகள் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். உங்கள் பெயரையும் விலாசத்தையும் எச். ஜே. பாண்டர் & கோ. லிட்., த. பெ. 202, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

# சுதந்திர வீரர் சுகர்ணு

எம். எல். சபரிராஜன்

'பஞ்சமோ பஞ்சம்!'

'பட்டினியோ பட்டினி!'

'அரிசியோ அரிசி!'

—ஆனால், இந்தியாவுக்கு உதவி செய்ய ...ந்து யாரையுமே காணோம். வெள்ளைக்கார ...சகங்களுக்கு உள்ளம் இரக்கவில்லை.

அமெரிக்காவுக்குப் போன அன்னக் காவ...க்கும் பலன் இல்லை.

"இந்தியாவா — அங்கே பஞ்சமா?" ...ன்று சந்தேகப்படுகிறது அமெரிக்கா.

ஆனால், நாம் காவடி தூக்கிக்கொண்டு ...பாகாமலும், வாய் திறந்து கேட்காததற்...ம் முன்னாலே, நமக்கு 5,00,000 டன் ...ணவுப் பொருளைக் கொடுக்க முன் வந்...ருக்கிறது இந்தியாவுக்குக் கிழக்கே ...ள்ள ஒரு தேசம்.

அதன் பெயர் இந்தோனேஷியா. ஜாவா, ...மத்ரா முதலிய தீவுகளடங்கிய ஒரு திருநாடு.

இந்தியாவுக்கு அன்னம் வழங்க முன் ...ந்திருக்கும் இந்த அற்புத தேசத்தின் ...லைவராகிய டாக்டர் இப்ராஹீம் அஹமது ...கர்ணு அவர்களே நம்முடைய இந்த இதழ் ...அட்டைப் படத்தை அலங்கரிக்கிறார்.

அவர் மாத்திரம் அல்ல. அவருடைய ...ர்ம பத்தினியும் அலங்கரிக்கிறார்.

இந்தோனேஷியா மக்களிடையே என் ...ம் கண்டிராத தேசா வேசத் தலைவி ...ண்டாக்கி, பேச்சு வன்மையில் மகா ...ல்லவர் என்று பெரும் புகழ்பெற்ற ஸ்ரீமதி ...கர்ணு நம்முடைய அட்டைப் படத்தின் ...லங்காரத்துக்கு மற்றொரு அலங்கார ...க விளங்குகிறார்.

ஆபத்திலே அரிசி கொடுக்க ...ன் வந்த இந்த அழகிய தேசத் ...தைப் பற்றித் தெரிந்து கொள்ள ...வண்டியது அவசியம் அல்லவா?

• • •

இதோ இந்தப் படத்திலே ...தான் நம் நீண்டு வளர்ந்த ...தென்னை மரங்களையும், அதற்கு ...ருகே அடர்ந்து வளர்ந்திருக் ...ம் சோலைகளையும், மாடுகளையும் ...யலையும் உழவனையும் உழவன் ...கையிலே பிடித்திருக்கும் தார்க் ...கம்பையும் பார்க்கும்போது, இது தமிழ் நாட்டின் ஒரு பகுதி என்றுதான் சொல்வார்களே யொழிய ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கும் இந்தோனேஷியாவிலுள்ள ஒரு கிராமம் என்று சொல்ல முடியாது.

அந்தத் தென்னை மரங்களையும் வயலையும் மாட்டையும் பார்த்த பிறகு கீழ்க்கண்ட பெயர்களையும் பாருங்கள்:

சுபூமி.

கதிரி.

சுந்தா.

மதுரா.

பாண்டுரங்கம்.

!!!

என்ன இது!—அதிசயமாக அல்லவா இருக்கிறது!

இந்தியாவுக்கும் இந்தோனேஷியாவுக்குமிடையே உண்மையில் அந்தமாதிரி ஒற்றுமை — தொடர்பு ஏதாவது இருக்கிறதா?

ஆமா, நிறைய இருக்கிறது!

தென் கடலிலே மின்னும் சிறு முத்துக்கள்போல மிதந்து கொண்டிருக்கும் இந்தக் கிழக்கு இந்தியத் தீவுகள் பாரத நாட்டுக்கு—அதிலும் முக்கியமாகத் தமிழகத்திற்குப் புதியன அல்ல.

தமிழ்நாடு பெரும் புகழுடன் பெருவாழ்வு வாழ்ந்த அந்தக் காலத்திலே, பல தமிழ் மன்னர்கள் இந்த இந்தோனேஷிய நாட்டிலே மணிமகுடம் தரித்து அரசு புரிந்து



ஒரு நாட்டுப்புறக் காட்சி.

# இந்தோனேஷியா




வந்தார்கள் என்றால் அது மிக்க அதிசய மாகவே இருக்கும்.

சாவகம், செண்பகம், புட்பகம், மரகதம் என்று தமிழ் நூல்களிலே புகழ்ந்து கூறப் பட்டிருக்கும் தீவுகள் இவையே யாகும்.

* * *

இந்தத் தென்னை மரங்களையும் சோலை களையும் தவிர இந்தியாவுக்கும் இந்தோ னேஷியாவுக்கு மிடையே இன்னும் சில ஒற்றுமைகளும் இருக்கின்றன.

இரு நாடுகளும் ஏறக்குறைய ஒரே காலத்திலேயே அந்நியரின் ஆதிக்கத்திற் குள்ளாயின. கிழக்கிந்தியக் கம்பெனி என்ற வர்த்தக வேஷத்திலே ஆங்கிலேயர்கள் இந்தியாவைக் கவர்ந்தார்கள். டச்சு இந்தி யக் கம்பெனி என்ற பெயரிலே டச்சுக் காரர்கள் இந்தோனேஷியாவைக் கவர்ந் தார்கள்.

அது மாத்திரம் அல்ல. இன்னும் சில ஒற்றுமைகளும் இருக்கின்றன.

இந்தோனேஷியாவிலே எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் தொகை நூற்றுக்கு எட்டு ஒன்பது பேருக்கு மேல் இல்லை!

இந்தியாவைப் போலவே, இந்தோனேஷி யாவிலும் சராசரி ஒரு மனிதனின் தினசரி வருமானம் அரை ரூபாய்க்கும் குறைச்சல்!

* * *

இந்தோனேஷியாவின் மொத்த விஸ்தீரணம் ஏழு லட் சத்து மூப்பதினாயிரம் சதுர மைல். இது ஏறக்குறைய மூவாயிரம் மைல் தூரம் வரை இந்து மகா சமுத்திரத்திலே சிறு சிறு தீவு களாகப் பரந்திருக்கிறது. இங்கு வாழும் மொத்த ஜனத்தொகை


டாக்டர் வான்மூக்

ஏறக்குறைய எ கோடியாகும். இவ பத்து லட்சம் பே ரோர்கள். இந்தியர்க சிலரும் ஐரோப்பியர் ளும் இருக்கின்றன மக்களிற் பெரும்பா மையோர் முகம்மதி யர்கள்.

இந்தோனேஷியாவை ஒரு போக பூ யென்றோ சொர்க்க பூ யென்றோ பொன்னுல கம் என்றோ — என்ன சிறப்புப் பெய கொடுத்து அழைத்தாலும் தகும். மனித வாழ்வுக்கு வேண்டிய எல்லாப் பொருள் களுக்கும் இங்கே ஒரு குறைவும் இல்லை அதுமாத்திரம் அல்ல. நவீன காலத் திலே ஒரு வல்லரசுக்கு வேண்டிய எல்லா மூலப் பொருள்களும் உலோகப் பொருள்களுக்கூடக் கிடைக்கின்றன.

ரப்பருக்குப் பஞ்சம் இல்லை.

மிகவும் முக்கியமான எண்ணெய்க்கும் பெட்ரோலுக்கும் பஞ்சம் இல்லை.

நிலக்கரிக்கோ, இரும்புக்கோ தகரத் துக்கோ, செம்புக்கோ, தாமிரத்துக்கோ— ஏன் தங்கத்துக்கே கூட யாதொரு குறை வும் இல்லை.

உலகத்திலே அதிகமாகத் தகரமு ரப்பரும் உற்பத்தி செய்யும் இரண் மூன்று நாடுகளிலே இந்தோனேஷியாவு ஒன்றாகும். எல்லாவற்றுக்கும் மேலாக அந் மண் இருக்கிறதே மண் - இந்தோனேஷி மண்-அதிலே தங்கம் போட்டாலும் தங் மாக விளையும் என்று சொல்லலாம்.

* * *

இவ்வளவு மூலப் பொருள்களும் இயற் கைப் பொருள்களும் செல்வமும் சிறப்பு இருக்கும்போது அதை விட்டுப் போகச் சொன்னால் டச்சுக்காரர்கள் எப் படிப் போவார்கள்?

ஆகையால், அவர்கள் சுதந்திரம் கேட்கும் ஏழை இந்தோனேஷிய மக்கள்மீது பீரங்கிப் பிரயோகம் செய்ததிலே என்ன அதிசயம் இருக்கிறது!

கடற்படை, விமானப்படை, ராணுவம் எல்லாவற்றையும் உட

யோகித்து இந்தோனேஷியாவிலே ஒரு முதல்தரமான மகா யுத்தத்தை ஆரம்பித்து இந்தோனேஷிய நாடு நகரங்களை யெல்லாம் தவிடுபொடி யாக்கிடுதிலே என்ன ஆச்சரியம் இருக்கிறது?

இந்த வெட்கக் கேடான காரியத்துக்கு மற்றொரு ஏகாதிபத்தியமான பிரிட்டனும் துணை புரிந்தது. ஆனால், ஒன்றும் நடக்கவில்லை. இந்தோனேஷியர்கள் கொஞ்சமும் பணியவில்லை. கடைசியில், இந்தோனேஷியர்களுக்குப் பெயரளவிலாவது ஏதாவது சீர்திருத்தம் வழங்கியாக வேண்டும் என்பதை டச்சு கவர்னர் வான்மூக் உணர்ந்தார்.



சர் ஆர்ச்பால்ட் கிளார்க் கேர்

உடனே ஹாலந்துக்குப் போய், அங்கு பல நாட்கள் வாத விவாதங்கள், தர்க்கங்கள் குதர்க்கங்கள் எல்லாம் செய்துவிட்டு ஒரு படுமோசமான அரசியல் திட்டத்தைக் கொண்டு வந்தார்.

இந்த அரசியல் திட்டத்திலே மிகவும் சிறப்பான சுவாரசியமான ஓர் அம்சம் என்ன வென்றால், இந்தோனேஷியர்கள் சொந்த ஆட்சி நடத்துவதற்கு வேண்டிய பக்குவம் இன்னும் அடையவில்லை; ஆகையால் அவர்கள் இன்னும் ஓர் இருபது வருஷ காலம் வரை டச்சு ஆதிக்கத்தின் கீழ் இருக்கவேண்டும் என்பதே யாகும்.

இந்தோனேஷியக் குடியரசுத் தலைவர்கள் இந்த அழகான அரசியல் திட்டத்தை வாங்கி பத்திரமாகவும் சர்வ ஜாக்கிரதையாகவும் குப்பைக் கூடையில் போட்டார்கள்.

டாக்டர் வான்மூக் திகைத்தார்.

இதற்கு மத்தியிலே பிரிட்டன் தன்னுடைய மானம் பறி போகிறதே யென்று அஞ்சி, இந்தோனேஷியக் குடியரசுத் தலைவர்களுக்கும் டச்சு சர்க்காருக்கு மிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக சர் ஆர்ச்பால்ட் கிளார்க் கேர் என்பவரை ஜாவாவுக்கு அனுப்பி வைத்தது.

பல நாட்களாகப் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன. ஆனால் முடிவு என்ன வென்பது இன்னும் வெளியாகவில்லை.

ஆனால் முடிவு என்ன ஆகும் என்பதை அவர்கள் சொல்ல வேண்டியதில்லை.

நமக்கே நன்றாகத் தெரியும்.

* * *

ஜாவாவை ஆண்ட ஜயபயா என்ற ஒரு தமிழ் மன்னன் இந்தோனேஷியாவின் எதிர்காலத்தைப் பற்றி ஒரு தீர்க்க தரிசனம் சொல்லியிருக்கிறான். அவன் தான் எழுதிய ஒரு புத்தகத்திலே, வெள்ளைக்காரர்கள் சுமார் இருநூறு வருஷ காலம் வரை இந்தோனேஷியாவை அடக்கியாள்வார்கள் என்றும், பிறகு மூன்று வருஷ காலம் மஞ்சள் நிற வகுப்பினர் ஆளுவார்களென்றும் அதற்குப் பிறகுதான் இந்தோனேஷியர்கள் தங்கள் நாட்டைத் தாங்களே ஆளுவார்களென்றும் எழுதி வைத்திருக்கிறான்.

ஏறக்குறைய இந்த ஜோசியத்தின் முக்கால் பகுதி பலித்திருக்கிறது. இன்னும் கால் பகுதியே பாக்கி இருக்கிறது.

விரைவில் இந்தோனேஷியா முழுவதிலும் இந்தோனேஷியர்கள் ஆட்சி நடைபெறும் என்பதில் சந்தேகம் இல்லை.

டச்சுக்காரர்களை மாத்திரம் அல்ல, பிரிட்டிஷ்காரர்களை மாத்திரம் அல்ல; கடவுளே நேரில் வந்தாலும் அவரையும் எதிர்த்துச் சுதந்திரமடைவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

அம்மாதிரி நாம் உறுதியாகவும் ஸ்திரமாகவும் நம்புவதற்குக் காரணம் என்னவென்பதையும் தெரிவித்து விடுகிறோம்.

இந்தோனேஷியாவிலே ஜின்னா இல்லை, சாவர்க்கர் இல்லை, கருஞ்சட்டைப் படையினர் இல்லை!

ஏழு கோடி மக்களும் சுதந்திரத்துக்காக ஏகோபித்து நிற்கிறார்கள்.

விரைவில் இந்தோனேஷியா பூரண சுதந்திரம் அடையுமென்றும் அந்தச் சுதந்திரக் குடியரசிற்கு டாக்டர் இப்ராஹீம் அஹமது சுகர்ணு தலைவராக வருவாரென்றும் எதிர்பார்க்கிறோம்.



'சுகர்ணுவுக்கு ஜே!' - சுகர்ணுவும் அவருடைய மனைவியும் மோட்டாரில் செல்கிறார்கள்.




## முடியாதுதான்!

கண்டிராக்டர்:—நீங்கள் பல தடவை பல வேலைகளுக்காக என்னிடத்தில் எஸ்டிமேட் வாங்கி யிருக்கிறீர்கள். இதுவரை ஒரு ஆர்டர் கூடக் கொடுக்கவில்லையே!

மற்றவர்:—அதெப்படி முடியும்? நானே ஒரு கண்டிராக்டர். உங்கள் எஸ்டிமேட்டை ஆதாரமாகக் கொண்டுதானே நான் ஆர்டர்கள் பெற்றுக் கொள்ளுகிறேன்! —ஜெயஸ்ரீ.

★

## மனச் சாந்தி!

சோமு:—இன்று சாயந்திரம் உன்னுடன் வெளியில் போக நான் வரவேண்டும் என்கிறாயா?

ராமு:—ஆமாம்; என்னுடைய நாய் இறந்ததிலிருந்து நான் தனிமையாகவே இருக்கிறேன்! —கே. ராமசாமி.

★

## கேட்டது வேறு

தரகர்:—பையனோ அப்படி ஒன்றும் புத்திசாலி என்றோ அழகன் என்றோ சொல்வதற்கில்லை. ஒரு பெரிய பங்களாவில் இருக்கிறான்.

பெண்ணின் தகப்பனார்:—ஏதாவது போட்டோ வைத்திருக்கிறீரா?

தரகர்:—இதோ வைத்திருக்கிறேன்; பாரும்!

பெண்ணின் தகப்பனார்:—நான் கேட்டது பையனின் போட்டோவை அல்ல; பங்களாவின் போட்டோவைத்தான்! —ஜி. சாவித்திரி.

★

## அதனால்தான்!

ஐயர்:—முருங்கைக்காய் என்ன விலை?

வியாபாரி:—ஓரணா சாமி!

ஐயர்:—என்னடா, விறகுக்கட்டை மாதிரி இருக்கிறது, ஓரணா என்கிறாயே?

வியாபாரி:—அதனால்தான் சாமி, அவ்வளவு விலை! இல்லாவிட்டால் அரையணாதான் விலை! —என். வி. கே. மூர்த்தி.

★

## பிறந்த பயன்?

ஒரு பெண்:—நான் ஒரு பெரிய மகான் இறந்து போன அன்றைக்குப் பிறந்தேன்.

அவள் தோழி:—இரண்டும் துக்கப்பட வேண்டிய விஷயங்கள்தான்! —வி. ஆர். ஸி.

## அதிர்ஷ்டசாலி!

"சாமி! உங்க பெண்ணுக்குப் பூ வாங்கிகிட்டுப் போங்க!"

"எனக்குப் பெண் கிடையாது!"

"அப்படின்னா, உங்க சம்சாரத்துக்கு வாங்கிகிட்டுப் போங்க!"

"சம்சாரமும் கிடையாது!"

"என்ன, சாமி! உங்க அக்கா, தங்கச்சி யாருக்காவது வாங்கிகிட்டுப் போங்களேன்!"

"எனக்கு யாருமில்லை, போடா!"

"அப்படின்னா, உங்க அதிர்ஷ்டத்துக்கு இந்தப் பூவை வாங்கிகிட்டுப் போய் சாமிக்குப் போடுங்க!" —டி. எஸ். திருவேங்கடம்.

★

## ஏன் இல்லை?

சித்திர உபாத்தியாயர்:—என்னடா, இந்தக் காகிதத்தில் நீ ஒன்றுமே எழுத வில்லையே, இது என்ன படம்?

பையன்:—இது மாடு புல் தின்கிற படம்.

உபா:—என்ன! இந்தப் படத்தில் புல்லைக் காணுமே?

பையன்:—அதை மாடு தின்று விட்டது ஸார்!

உபா:—அப்படியானால் மாடு எங்கே?

பையன்:—என்ன ஸார்! புல்லைத் தின்ன பிறகு மாடு எதற்காக அங்கே இருக்கப் போகிறது! —எஸ். வேலு.

★

## அப்படியா?

ராமு:—உங்கப்பா ஆத்திலே இருக்காரா?

கிட்டு:—இல்லை.

ராமு:—எங்கே போயிருக்கார்?

கிட்டு:—ஜெயிலுக்கு.

ராமு:—ஜெயிலுக்கா! ஐயய்யோ! என்னடா குற்றம் செய்தார்?

கிட்டு:—போடா முட்டாள், எங்கப்பா ஜெயில்லே கைதிகளுக்கு வாத்தியாரடா.

—எஸ். சுப்பராஜ்.

★

## அவ்வளவு கோரமா?

ராமையர் (கோபாலய்யரிடம்):—என்ன கோபாலய்யர்! நாலு நாட்களாய் உங்களைக் கண்ணாலேயே பார்க்க முடியவில்லை.



கோபாலய்யர்:—என்ன ஐயா, நீர் சொல்லுவது! பார்க்க முடியாமல் அவ்வளவு கோரமாகவா இருக்கிறேன்? —ஜி. சம்பத்.

# கடன் வாங்குவது எப்படி?

சாலி

[பத்து ரூபாய் கடன் வாங்குவதைக் காட்டிலும் பதினாயிரம் ரூபாய் கடன் வாங்குவது ரொம்ப சுலபம்; பதினாயிரம் ரூபாய் வாங்குவதைவிடப் பத்து லட்சம் வாங்குவது ரொம்ப ரொம்ப சுலபம்; பத்து லட்சம் ரூபாயை விடப் பத்து கோடி வாங்குவது இன்னும் மிக சுலபம். உதாரணத்துக்குச் சில காட்சிகளைப் பாருங்கள்.]

கணபதிப் பிள்ளைக்கு அவசரமாகப் பத்து ரூபாய் தேவையாயிருக்கிறது. அதற்காக நடேசய்யரைத் தேடி வருகிறார்.

நடேசய்யர்:— எங்கே இப்படி ரொம்ப தூரம் பிள்ளைவாள்?

க-பிள்ளை:— ஒன்றுமில்லை; ஒரு சின்ன உத்தாசை. பத்து ரூபாய் பணம் வேண்டும். இன்னும் நாலு நாளில் முதல் தேதி சம்பளம் வந்தவுடன் திருப்பித் தந்து விடுகிறேன்.

[கணபதிப் பிள்ளையின் தேகம் அஷ்டகோணலாக வளைகிறது. இடது கை அகாரணமாய்ப் பிடரியைத் தடவுகிறது.]

நடேசய்யர்:— போன நவம்பர் மாதம் கூட ஒரு தடவை பத்து ரூபாய் வாங்கிக் கொண்டு முதல் தேதி திருப்பித் தந்து விடுவதாகத்தான் போனீர். ஆனால், அப்புறம் புது வருஷம் பிறந்த பிறகுதான் திருப்பித் தந்தீர். ஞாபகமிருக்கிறதா?

க-பிள்ளை:— இருக்கிறது; ஆனால் இந்தத் தடவை தவற மாட்டேன்.

அரைமணி நேரம் இம்மாதிரி நடேசய்யருக்கும், கணபதிப் பிள்ளைக்கும் தர்க்கம் நடக்கிறது. கடைசியில் கணபதிப் பிள்ளை நடேசய்யரிடமிருந்து பத்து ரூபாயை வாங்கிக் கொண்டு போவதற்குள் பெரும்பாடாகி விடுகிறது.

2

இரும்பு வியாபாரம் இஸ்மாயில் கம்பெனி முதலாளி தம்முடைய வியாபாரத்தை விரிவான முறையில் பெருக்க விரும்புகிறார். அதற்குக் கொஞ்சம் முதல் தேவையாயிருக்கிறது. ஆகையால் உள்ளூர் பாங்கி மானேஜரைப் பார்த்து வரச் செல்கிறார்.

மானேஜர்:— வாருங்கள், உட்காருங்கள்; என்ன விசேஷம்?

இஸ்மாயில்:— வியாபாரத்துக்குக் கொஞ்சம் பணம் தேவை...

மானேஜர் (லெட்ஜரைப் புரட்டிக் கொண்டே):— எவ்வளவு தொகை வேண்டியிருக்கும்?

இஸ்மாயில்:— பத்தாயிரம் ரூபாய்.

மானேஜர்:— ஏற்கெனவே இரண்டாயிரம் 'ஓவர்டிராப்ட்' வாங்கியிருக்கிறீரே?

இஸ்மாயில்:— ஆமாம்; அதை இம்மாத முடிவுக்குள் கட்டி விடுகிறேன்.

மானேஜர்:— சரி; உம்முடைய வீடு ஒன்று காலியாயிருக்காமே; அதை எனக்குக் குடியிருக்க ஏற்பாடு செய்ய முடியுமா!

இஸ்மாயில்:— ஆகட்டும்;

[பாங்கி மானேஜர் இந்த நிபந்தனையின் பேரில் ஆறுமாதத் தவணையில் பத்தாயிரம் ரூபாய் கடன் தர ஒப்புக் கொள்கிறார்.]

3

அதே பாங்கி வாசலில் ஒரு கார் வந்து நிற்கிறது. அதிலிருந்து ஒரு ஜரிகைத் தலைப்பாகைப் பிரமுகர் இறங்கி வருகிறார். பாங்கி மானேஜர் அவரை எதிர்கொண்டு அழைத்துப் போய் ஆசார உபசாரம் செய்கிறார்.

மானேஜர்:— தங்களை எதிர்பார்த்துக் கொண்டே இருந்தேன். இவ்வளவு தூரம் எங்கள் பாங்கியைத் தேடி வந்ததற்கு ரொம்ப வந்தனம்.

பிரமுகர்:— அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. ஒரு சின்ன விஷயமாக வந்தேன். பத்து லட்சம் ரூபாய் வேண்டும்.

மானேஜர்:— கேள்விப்பட்டேன். டைரக்டர் சொன்னார்; ரொம்ப சந்தோஷம். தாங்களுக்கு இல்லாமலா? பத்து லட்சம் போதுமா? இன்னும் இரண்டு லட்சம் கூட வேண்டுமா?

பிரமுகர்:— வேண்டாம்; வேண்டாம். இப்போதைக்குப் பத்து லட்சம் போதும். கையெழுத்து ஏதாவது வேண்டுமா?

மானேஜர் :—அதெல்லாம் ஒன்றுமே வேண்டாம். வேண்டிய ஏற்பாட்டைக் குமாஸ்தாக்கள் செய்து கொள்வார்கள்.

[இப்படியாகப் பத்து லட்ச ரூபாய் கையெழுத்து காலெழுத்து இல்லாமல் பத்தே நிமிஷத்தில் ரொம்ப சுலபமாகக் கை மாறி விடுகிறது.]

4

அமெரிக்காவிடம் பிரிட்டன் வாங்கிய கடனைப் பற்றி அமெரிக்கப் பத்திரிகைகளில் பின் வருமாறு செய்திகள் வெளியாகின்றன :—

வாஷிங்டன், மே, 12 :—இன்று லண்டனிலிருந்து பிரிட்டிஷ் அயல் நாட்டு மந்திரியும், நிதி மந்திரியும் அமெரிக்காவுக்கு விமான மூலம் பறந்து வந்தார்கள். விமான நிலயத்தில் மேற்படி இரு மந்திரிகளையும் அமெரிக்கத் தலைவரும் அவருடைய காரியதரிசியும் மாலைகள் போட்டு வரவேற்றார்கள். மந்திரிகள் இங்கே ஒரு மாத காலம் தங்கி யிருப்பார்கள் என்றும் பிரிட்டனுக்காக 10 கோடி டாலர் கடன் கேட்க வந்திருப்பதாகவும் விஷயமறிந்த வட்டாரத்தில் பேசிக் கொள்கின்றனர்.

வாஷிங்டன், மே, 13 :—பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு இன்று அமெரிக்கத் தலைவர் விருந்தளித்தார்.

வாஷிங்டன், மே, 14 :—இன்று அமெரிக்கத் தலைவரும் பிரிட்டிஷ் மந்திரிகளும் மீன் பிடிக்கச் சென்றார்கள். 10 கோடி டாலர் விஷயமாக நாளை ஸெனட் சபையில் விவாதிக்கப்படும் என்று தெரிகிறது.

வாஷிங்டன், மே, 16 :— இன்று ஸெனட் சபையில் கடன் விஷயத்தை



வோட்டுக்கு விட்டதில் பிரிட்டனுக்கு சாதகமாக 47 வோட்டுக்களும் பாதகமா 13 வோட்டுக்களும் கிடைத்தன. நாளை பிற்பகல் மந்திரிகள் ஊருக்குத் திரும்பு வார்கள் என்றும் போகுமுன் நகர சபையில் விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது.

வாஷிங்டன், மே, 17உ :—நகர சபை அளித்த விருந்துக்குப் பதிலளிக்கையில் பிரிட்டிஷ் மந்திரிகள் அமெரிக்காவின் தாராள மனப்பான்மையைப் பாராட்டிப் பேசி வந்தனம் செலுத்தினார்கள்.

5

## ஆறு மாதத்துக்குப் பிறகு

சீனபதிப் பிள்ளை நடேசய்யரிட வாங்கின பத்து ரூபாயைத் தாம் சொன்ன படி முதல் தேதியே கொண்டு வந்து கொடுத்து விட்டார்.

இம்பாயில் கம்பெனி முதலாளி தாம் சொன்னபடி ஆறு மாதத் தவணையில் கடனை அடைக்க முடியாமல் இதுவரை காலத்தைக் கடத்திக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீமான் ஜரிகைத் தலைப்பாகைப் பிரமுகரோ பாங்கியில் பத்து லட்சம் ரூபாய் கடன் வாங்கிய சில மாதங்களுக்கெல்லாம் 'இன்ஸால்வெண்ட்' கொடுத்து விட்டு பாங்கிக்கு பட்டை நாமத்தைச் சாத்தினார்.

பிரிட்டன் அமெரிக்காவிட வாங்கிய டாலர் பாக்கியை ஸ்டர்லிங் கணக்காக மாற்றி அமெரிக்காவுக்குப் பிரிட்டன் தரவேண்டிய கடனை, இந்தியாவுக்கு அமெரிக்கா தரவேண்டிய டாலர் பாக்கியில் கழித்து கணக்கை ஒரே குழப்பாக குழப்பிக் குளறுபடி செய்து சரிக்கட்டி விட்டதாக பிரிட்டிஷ் பார்லிமெண்டில் தீர்மானம் நிறைவேற்றி விட்டார்கள்.

நீதி :—நேயர்களே! இனி மேல் நீங்கள் கடன் வாங்குவதா யிருந்தால் வாங்கும் தொகை ரொம்ப பெரிய தொகையாக இருக்க வேண்டும்!

—ஆங்கிலத் தழுவல்.

## அரோஹரா!



# ரெக்ஸோனா

## சரும அழகை உண்டாக்குகிறது

### ...சரும சுகத்தை பாதுகாப்பதன் மூலம்






ஆம், ஏனென்றால் ரெக்ஸோனா சுறுசுறுப்பாய் உற்சாகமூட்டிச் சரும சுகத்தைப் பாதுகாக்கிறது — சரும சுகத்திற்குச் சரும சௌந்தரியமே உண்மையான அடிப்படை — சரும அழகைக் கொடுக்கும் பாத்தியதை தனக்கேயுண்டென்று ரெக்ஸோனா உண்மையாகச் சொல்லக்கூடும்.

இதை எப்படி ரெக்ஸோனா செய்கிறது? சரும வியாதியைப் போக்கும் கிருமி நாசினியாகிய 'கேடில்' என்னும் மருந்து அதிற் சேர்ந்திருப்பதால் அது அவ்வாறு செய்கிறது. சரும உபத்திரவங்களும், சரும மாசமறுக்களும் அடிக்கடி அதிகமாய் உண்டாகும் இடங்களுக்கும் — சருமத்தின் ஒவ்வொரு அடிப்பாகத்திற்கும் — சுகமளித்துச் சுத்தம்செய்கிற கேடில் என்னும் மருந்தை ரெக்ஸோனாவின் விரைவில் உண்டாகும் நுரை கொண்டுபோய்ச் சேர்க்கும் சக்திவாய்ந்தது.

**ரெக்ஸோனா, குடும்ப சோப்**

அழகான, பசுமைவாய்ந்த, விரைவில் நுரையைத் தரும் இந்த சிறந்த ஒப்பற்ற சோப்பின் குணங்களைக் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் புகழ்ந்து ஓதுவார்கள்... சரும அழகைத்தர அது அதிக சிறந்த சக்திவாய்ந்திருப்பதால் ஸ்திரீகள்... ஆரோக்யமான சருமத்தின் அவசியத்தை எல்லா ஜனங்களும் அறிந்திருப்பதால் மனிதர்கள்... குழந்தைகளுக்கு இதைக் காட்டிலும் சிறந்த பாதுகாப்புடைய சோப் வேறு இல்லை மருந்திடப்பட்ட ரெக்ஸோனாவின் நுரை உடலெரிச்சலைச் சாந்தப்படுத்துகிறது. ரணங்களை ஆற்றிக் காப்பாற்றுகிறது — குழந்தையின் சருமத்தைக் குளிர்ச்சியாகவும், சுகமுடையதாகவும் செய்கிறது. சரும சுகம் நிச்சயமாக ஏற்படக் குடும்பம் முழுவதும் ரெக்ஸோனாவை ஒழுங்காய் உபயோகிக்க வேண்டும்.



★ரெக்ஸோனாவிலுள்ள கேடில் கிருமி நாசினியாகிய ஒரு ஒப்பற்ற கலப்பு மருந்து. சரும சுகத்திற்கு அதிக சக்திவாய்ந்தது; குணமளித்துப் போஷிக்கும் தைலம் சேர்ந்தது. சுகத்தையளித்துக் காப்பாற்றும் தன்மையுள்ள கேடில் யாவராலும் மதிக்கப்பட்டு, விஞ்ஞானிகளால் பொச்ச செய்யப்பட்டிருக்கிறது.

ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள். வெட்டுக் காயங்கள், புண்கள், கட்டிகள், கரப்பான் ரணங்கள், முகப்பருக்கள், அரிப்புகள், சிரைப்புகள், கடிகள், மச்ச மருக்கள் முதலிய எல்லா சரும வியாதிகளுக்கும் ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள்.




RP. 29-23-40 TM

REXONA PROPRIETARY LIMITED

சகலவிதமான வலிகளும் மாயமாய்
மறைந்து விடும்!

# ஸாரிடோன்

மாத்திரைகள் சாப்பிட்ட
பத்தே நிமிஷங்களில்

---

இருமல் ஜலதோஷத்திற்கு
சாஸ்திரரீதிப்படி தயாரித்த
ஓர் உன்னதமான மருந்து!

# ஸிரோலின்

'ரோச்'



# அருமையான பற்கள் !

## உங்கள் பற்கள் எத்தனை நாட்கள் புன்னகையை அழகுபடுத்தும் ?




ஒருவர் உள்ளத்தைக் கவர உங்கள் வசீகரப் புன்னகை மிகவும் எளிதானவழி என்பதை அறிவீர்களல்லவா. ஆகையால், உங்கள் பற்களை ஈறுவியாதிகள் பாழ்படுத்தாமல் காப்பாற்றிக் கொள்ளுங்கள். தினமும் தவறாமல் சுகமளிக்கும் எஸ். ஆர். டூத்பேஸ்ட்*ஆல் பற்களை சுத்தம் செய்தால் அவை உறுதியான ஈறுகளில் அப்பழுக்கற்று வெண்மையுடன் விளங்குகின்றன.

*பல் வைத்தியர்கள் ஈறுவியாதிகளுக்கு கைகண்ட மருந்தெனக் கருதும் சோடியம் ரிஸினோலியேட் சேர்ந்தது.

GSR. 20-50 TM D. & W. GIBBS LIMITED, LONDON, ENGLAND

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# உறுதியானவை - நாள்பட்டு உழைக்கக் கூடியவை



ஒற்றை: சலவை செய்ததும் செய்யாததும் 60 முதல் 150 வரை. இரட்டை: சலவை செய்ததும் செய்யாததும். மெர்ஸெரைஸ்ட் 2/140 வரை கிடைக்கும்.




**தி கட்டாவ்-மகான்ஜி ஸ்பினிங் & வீவிங் கம்பெனி லிட்**

மில்ஸ்: பைகுல்லா, பம்பாய்.

ஆபீஸ்: கஸ்தூரி பில்டிங், பல்லார்ட் பியர். போர்ட், பம்பாய்.

KM. 54—Tamil

ஆரோக்யம்,
பலம் - ஜீவ
சக்தியின்
ரகசியம்

பலஹீனமாய், மெலிந்து
குன்றிப் போனவர்களுக்கு



அதிக வேலை செய்யும் போது, கவலையும், ஆயாசமும், உங்கள் தேகத்திலுள்ள ஜீவாதார தாதுப் பொருள்களை இழக்கச் செய்வதினால், நீங்கள் குன்றி பலஹீனமடைந்து, மந்தமடைகிறீர்கள். அப்படி இழந்த தாதுக்களைத் திரும்பச் சேர்த்து ஆரோக்ய பத்ததிக்கும் போஷாக்கு அளித்தால் புது பலத்திற்கும், ஆரோக்யத்திற்கும் வழியைக் காண்கிறீர்கள்.

டானிக் ஆகாரமான விக்கல்ப் — சரியான நிதியில் அன்றாடம் பங்கிட்டு 9 தாது உப்புக்களையும் அயோடின் ஆகாரத்தையும் அளிக்கிறது. இவ்வித மூலப்பொருள்கள் தேக ஆரோக்ய பத்ததியில் ஐக்யமாகும் போதே வளருகிறீர்கள். ஆயாசம் நீங்கி வீர்யம் ஏற்படும். மந்தம் மறைகிறது. பலஹீனம் பலமாக மாறுகிறது. புது ஆரோக்யம் கண்டு பிரகாசிக்கிறீர்கள். இன்றே விக்கல்ப் சாப்பிடுங்கள்.

A Tonic and a FOOD combined!

டானிக்கும் ஆகாரமும் சேர்ந்தது

**VIKELP** MINERAL TABLETS

விக்கல்ப் தாது பில்லைகள்

AD. NO. 5432

# நங்கையின் நன்றி



# லோத்ரா

கர்ப்பாசய ரோக நிவாரணி

கர்ப்பாசயக் கோளாறுகளால் அவஸ்தைப் பட்ட பின் லோத்ரா அவளுக்கு புத்துயிரும் ஆரோக்கியமும் அளித்தது.



கேசரி குடீரம் லிட., மதராஸ்

நைஜாம் சமஸ்தானம், ஆந்திர ஜில்லாக்கள், தமிழ் நாடு முதலிய இடங்களுக்கு ஏஜண்டுகள் :—

சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்

செகந்திராபாத் : பெஜவாடா : மதுரை

Regd. No. M. 4392




இன்று ஒவ்வொரு
குழந்தையும் மிக ஆவ
லுடன் விரும்பி ருசித்
துச் சாப்பிடுவது

# சார்லீஸ் பிஸ்கட்ஸ்!




அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

## CHARLEY & CO.,
## USILAMPATTI.

Murali

Agents For Salem & N Arcot Dts. The General Agencies Corporation First Agraharam, Salem. Agents For Nilgiris: Messrs. Brilliant Traders, Ootacamund.